بسم الله الرحمن الرحيم

# الفقه الميسر

في ضوء الكتاب والسنة

تأليف نبذة من العلماء حفظهم الله

குர்ஆன், சுன்னா ஒளியில்

# இலகுவான மார்க்க சட்டம்

كتاب الزكاة

## ஸகாத்

3ம் பாகம்

அரபியில் :
அறிஞர்களின் குழு

தமிழில் :
குர்ஆன், சுன்னா பணியாளர்
உமர் ஷரீஃப் இப்னு அப்துஸ் ஸலாம்

DARUL HUDA

# KITAB AZ-ZAKAH - AL FIQHUL MUYASSAR

ABOUT THIS BOOK

| | |
|---|---|
| Author | : GROUP OF SCHOLARS |
| Translator | : Omar Sheriff Ibnu Abdus Salam |
| Proof Readers | : Alim O.M. Kaja Mohaideen Rabbani<br>Alim A. Mohamed Mydeen Baqavi<br>Alim A. Abdul Qadir Rabbani<br>Alim B. Mansur Ahamed Umari<br>Alim K. Abdul Akbar Firdousi |
| Designers | : Z. Abdul Bari Sadaqi, Mohamed Anas |
| Language | : Tamil |
| Edition | : 1st (March 2019) |
| Copies | : 3000 |
| Total Pages | : 88 |
| **Price** | **: Rs. 60/-** |
| Printed by | : Patel Graphics, Chennai - 06. |
| Reference No. | : DH-TML 2057 |

Published by:

DARUL HUDA
QUALITY ISLAMIC BOOK PUBLISHERS
# 211 (102), 1st Floor, Linghi Street, Mannady, Chennai 600001.

Phone : +91 44 25247866, | darulhuda.chennai@gmail.com
Mobile : +91 98401 74121 | www.darulhuda.net

# உள்ளே...


பதிப்புரை .................................................. 4

தாருல் ஹுதா ஓர் அறிமுகம் .................................................. 5

பாடம் 1 — ஸகாத் ஓர் அறிமுகம் .................................................. 10

பாடம் 2 — தங்கம், வெள்ளி உடைய ஸகாத் .................................................. 30

பாடம் 3 — பூமியில் விளையக்கூடியவற்றில் ஸகாத் .................................................. 43

பாடம் 4 — கால்நடைகளின் ஸகாத் .................................................. 50

பாடம் 5 — ஸகாத்துல் ஃபித்ர் - ஃபித்ரா .................................................. 67

பாடம் 6 — ஸகாத்திற்கு உரியவர்கள் .................................................. 74

# பதிப்புரை

**الحمد لله والصلاة والسلام على رسول الله وعلى آله وصحبه أجمعين**

அல்லாஹ்வின் அருளால், அல்ஃஃபிக்ஹுல் முயஸ்ஸர் என்ற பெயரில் திறமை வாய்ந்த மார்க்க அறிஞர்கள் குர்ஆன் மற்றும் ஸுன்னாவின் அடிப்படையில் தொகுத்த கிரந்தத்திலிருந்து **தூய்மை மற்றும் தொழுகை** அத்தியாயங்களை வெளியிட்டதைத் தொடர்ந்து **ஸகாத்** உடைய சட்டங்கள் நிறைந்த இந்த மூன்றாவது அத்தியாயத்தை வெளியிடுகின்றோம்.

மார்க்க கல்வி கற்ற ஆலிம்களுக்கும் கல்வி கற்கின்ற மாணவர்களுக்கும் பொதுமக்களுக்கும் இந்நூல் இன் ஷா அல்லாஹ் பயனுள்ளதாக இருக்கும். இந்த அத்தியாயத்தை தொடர்ந்து நோன்பு, ஹஜ் மற்றும் முஆமலாத் (-பொருளாதாரம்) தொடர்பான அத்தியாயங்களும் விரைவில் வெளிவர இருக்கின்றன இன் ஷா அல்லாஹ்...

இந்நூலில் ஏதேனும் குறைகளை தாங்கள் கண்டால் எங்களுக்கு தெரியப்படுத்துங்கள். அடுத்த பதிப்பில் திருத்தி வெளியிடுகிறோம்.

இந்நூல் வெளிவருவதற்கு உதவியாக இருந்த தாருல் ஹுதாவின் பணியாளர்கள் எல்லோருக்கும் இம்மை மறுமை நற்பாக்கியங்களை அல்லாஹ் தந்தருள்வானாக! ஆமீன்.

இந்நூலை அல்லாஹ் அங்கீகரித்து மக்களெல்லாம் பயன்பெறும்படி செய்வானாக! ஆமீன். தொடர்ந்து பயன்தருகின்ற நல்ல நூல்களை வெளியிடுவதற்கு அல்லாஹ் உதவி செய்வானாக!

மார்க்க பணியாளன்
*உமர் ஷரீஃப் இப்னு அப்துஸ் ஸலாம்*
தாருல் ஹுதா, சென்னை 600001.

# தாருல் ஹுதா

## ஓர் அறிமுகம்

எல்லாப் புகழும் அகிலங்களின் இறைவன் அல்லாஹ் ஒருவனுக்கே! இறையருளும் ஈடேற்றமும் நபி முஹம்மது (ஸல்) அவர்களுக்கும், அவர்களது குடும்பத்தார், தோழர்கள், அவர்களைப் பின்பற்றும் அனைவருக்கும் உண்டாகட்டும்! இஸ்லாமியச் சகோதர சகோதரிகளே!

அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மத்துல்லாஹி வபரகாத்துஹு

தாருல் ஹுதாவை அறிமுகம் செய்வதன் வாயிலாக உங்களைச் சந்திப்பதில் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறோம். இதில் தாருல் ஹுதாவின் நோக்கத்தையும் அதன் பணிகளையும் விவரிப்பதுடன் அதன் இன்றைய தேவையையும் தங்கள் முன் வைக்கிறோம்.

அல்லாஹு தஆலா கூறுகிறான்:

"நம்பிக்கை கொண்ட ஆண்களும், நம்பிக்கை கொண்ட பெண்களும் (தங்களுக்குள்) ஒருவருக்கொருவர் உற்ற துணைவர்களாவர். அவர்கள், (ஒருவர் மற்றவரை) நன்மை செய்யும்படித் தூண்டியும், பாவம் செய்யாது தடுத்தும், தொழுகையைக் கடைப்பிடித்து, ஸகாத்து கொடுத்தும் வருவார்கள். அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் கட்டுப்பட்டு நடப்பார்கள். இத்தகையவர்களுக்கு அதிசீக்கிரத்தில் அல்லாஹ் அருள்புரிவான். நிச்சயமாக, அல்லாஹ் மிகைத்தவனாகவும், ஞானமுடையவனாகவும் இருக்கின்றான்." (அத்தவ்பா 9 : 71)

(நம்பிக்கையாளர்களே!) உங்களில் ஒரு கூட்டத்தார் (மனிதர்களை)

சிறந்ததின் பக்கம் அழைத்து நன்மையைச் செய்யும்படி ஏவி, பாவமான காரியங்களிலிருந்து அவர்களை விலக்கிக் கொண்டும் இருக்கட்டும். இத்தகையவர்கள்தாம் வெற்றி பெற்றவர்கள். (ஆலுஇம்ரான் 3 : 104)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: உங்களில் யாராவது ஒரு தவறைக் கண்டால் அதைத் தமது கரத்தால் மாற்றட்டும். அது இயலாவிட்டால் தமது நாவால் மாற்றட்டும். அதுவும் இயலாவிட்டால் உள்ளத்தால் (வெறுத்து விலகி விடட்டும்). இது ஈமானின் (நம்பிக்கையின்) குறைந்தபட்ச அளவாகும். (ஸஹீஹ் முஸ்லிம்)

மேலும் கூறினார்கள்: நம்பிக்கையாளர்கள் தங்களிடையே நேசம் கொள்வதற்கும், கருணை காட்டுவதற்கும், அன்பு செலுத்துவதற்கும் உதாரணம் ஓர் உடலைப் போல. உடலில் ஏதேனும் ஓர் உறுப்பு பாதிக்கப் பட்டால் அனைத்து உறுப்புகளும் காய்ச்சல் மற்றும் தூக்கமின்மையால் முறையிடுகின்றன. (ஸஹீஹுல் புகாரி)

இன்று நமது சமுதாயத்தில் சிறியோர் முதல் பெரியோர் வரை பெரும்பாலோர் சரியான மார்க்க ஞானத்திற்கும் முறையான வழிகாட்டலுக்கும் அதிகம் தேவையுள்ளவர்களாக இருப்பதைப் பார்க்கிறோம். ஆகவே, மேற்கூறப்பட்ட இறை வசனங்கள் மற்றும் நபிமொழிகளுக்கிணங்க சமுதாயச் சீர்திருத்தப் பணியில் ஈடுபடுவது மார்க்கக் கடமை என்பதை உணர்ந்து, அல்குர்ஆன் மற்றும் நபிவழியின் அடிப்படையில் அந்த உயர்ந்த பணியை நிறைவேற்றி இறை திருப்தியை அடைய வேண்டும் என்ற தூய எண்ணத்தில் தொடங்கப்பட்டதுதான் “தாருல் ஹுதா’

## தாருல் ஹுதாவின் பணிகளும் தொண்டுகளும்

### அழைத்தல்:

இதுவே இஸ்லாமின் அடிப்படையாகும். உலகில் இப்பணி இறைத் தூதர்கள் வாயிலாக நிலைநிறுத்தப்பட்டது. இறுதி இறைத்தூதர் முஹம்மது (ஸல்) அவர்களுக்குப் பின் அவர்களுடைய சமுதாயத்தினர் அனைவரின் மீதும் இப்பணி கடமையாக்கப்பட்டது. மேன்மைமிகு குர்ஆனும்,

சிறப்புமிகு நபிமொழியும் இதன் அவசியத்தை வலியுறுத்துகின்றன. எனவே, இயன்ற அளவு அனைத்து வழிகளிலும் மனித சமுதாயத்திற்கு இஸ்லாமை அறிமுகப்படுத்துவதும் அதன் உயர்வுகளை விளக்கிச் சொல்லி அதன் பக்கம் அழைப்பதும் தாருல் ஹுதாவின் முதல் பணியாகும்.

**கற்பித்தல்:**

இஸ்லாமை அறிய விரும்பும் சிறுவர்கள், வாலிபர்கள், முதியவர்கள், ஆண்கள், பெண்கள் என அனைவருக்கும் மேன்மைமிகு குர்ஆன், சிறப்புமிகு நபிமொழிகளை அவரவர் தகுதிக்கேற்ப கற்றுத் தருவது தாருல் ஹுதாவின் இரண்டாவது பணியாகும்.

**நூல் வெளியிடுதல்:**

மேன்மைமிகு குர்ஆன், சிறப்புமிகு நபிமொழி இரண்டையும் அடிப்படையாகக் கொண்டு சமுதாயப் பேரறிஞர்களால் அரபி மொழியில் எழுதப்பட்ட நூல்களைத் தமிழிலும் ஏனைய உலக மொழிகளிலும் மொழியாக்கம் செய்து, அந்நூல்களைச் சலுகை விலையில் மக்களுக்கு வழங்குவது தாருல் ஹுதாவின் மூன்றாவது பணியாகும்.

**உதவுதல்:**

அல்லாஹு தஆலாவே அனைவரின் தேவைகள், துன்பங்கள் அனைத்தையும் நிவர்த்தி செய்பவன். மிகப் பெரிய வள்ளலாகிய அல்லாஹ் தன் சார்பாக உலகில் ஏழை, எளியோர், நலிந்தோர் ஆகியோரின் துயர் துடைக்கும் வள்ளல் பெருமக்களுக்கு பெரும் வெகுமதிகளை ஈருலகிலும் வழங்குவதாக வாக்களித்துள்ளான். பிறர் துன்பங்களில் பங்கெடுப்பது, பிறர் தேவைகளை நிறைவேற்ற இயன்றவரை உதவுவது முஸ்லிம்களுடைய அடிப்படைப் பண்புகளாகும்.

இந்த உன்னத பணிக்காக பைத்துல்மால் (பொது நிதி) ஏற்பாடு செய்து இரக்கச் சிந்தையும், மார்க்கப்பற்றும் கொண்ட வள்ளல் பெருமக்களிடமிருந்து கடமையான, உபரியான தர்மங்களைப் பெற்று

அவற்றை தேவையுடையவர்களுக்கு வழங்குதல் தாருல் ஹுதாவின் நான்காவது பணியாகும்.

இந்தப் பணிகள் மட்டுமின்றி, இஸ்லாம் முழுமையாக ஒவ்வொருவரின் வாழ்விலும் வரவேண்டும் என்பதற்காகவும், மனித சமுதாயங்களுக்குள் நல்லுறவும், அன்பும், கருணையும், சமூகப் புரிந்துணர்வும் ஏற்பட வேண்டும் என்பதற்காகவும் இயன்றவரை அல்லாஹ்வுக்காகத் தொண்டாற்ற வேண்டும் என்பது தாருல் ஹுதாவின் குறிக்கோளாகும்.

இப்பணிகள் அனைத்தும் தொய்வின்றி தொடர்ந்து சிறப்பாக, திறம்பட நடைபெறவும், அவற்றை அல்லாஹ் அங்கீகரிக்கவும், தாங்கள் துஆ செய்யும்படி அன்புடன் கேட்டுக் கொள்வதுடன், தங்களால் இயன்றவரை இப்பணிகளில் பங்குபெறுமாறும் அழைக்கிறோம்.

நல்லுள்ளம் கொண்ட மேன்மக்களே! நீங்கள் கொடுக்கும் தர்மங்கள் அல்லாஹ்வின் மார்க்கத்தைப் பரப்புவதற்கு நிச்சயம் பேருதவியாக இருக்கும் என்பதை மறந்து விடாதீர்கள்.

உங்களால் முடிந்த அளவு பங்குகொண்டு ஈருலக நற்பேறுகளை அடைந்து கொள்ளுங்கள்! மார்க்கத்திற்காகக் கொடுக்கப்படும் தர்மங்களுக்குச் சிறப்புகளும் நன்மைகளும் ஏராளம் உள்ளன என்பது உங்களுக்குத் தெரிந்ததே!

முடிந்த உதவிகளை மறுமையின் வீட்டை நாடி, அல்லாஹ்வின் பொருத்தத்திற்காக தந்துதவுங்கள்.

"நீங்கள் உங்கள் ஆன்மாக்களுக்காக நன்மையில் எதை முற்படுத்திக் கொள்கிறீர்களோ, அதைத்தான் அல்லாஹ்விடத்தில் மிகச் சிறந்ததாகவும், மகத்தான கூலியாகவும் பெற்றுக் கொள்வீர்கள்."

(அல்முஸ்ஸம்மில் 73 : 20)

அவனிடமே உதவி தேடுகிறோம்! அவனையே முன்னோக்கி நிற்கிறோம்!

--------

DARUL HUDA , CHENNAI - 1 | muftiomar@gmail.com | 044 25247866

*முதலாவது பாடம்*

## الباب الأول في مقدمات الزكاة

## ‘ஸகாத்’ பற்றிய முன் குறிப்புகள்

இந்த பாடத்தில் பல சட்டவிளக்கங்கள் உள்ளன.

**முதல் சட்டவிளக்கம்**

### ‘ஸகாத்’ உடைய வரையறை

அரபி மொழியில் ‘ஸகாத்’ உடைய பொருள் வளர்ச்சி, அதிகமாகுதல் என்பதாகும்.

மார்க்கத்தில் ‘ஸகாத்’ என்றால் செல்வம் உடையவர்கள் நிறைவேற்ற வேண்டிய ஒரு கட்டாயக் கடமையாகும். அதாவது, செல்வம் குறிப்பிட்ட அளவை அடைந்துவிடும்போது, இன்னும் சில குறிப்பிட்ட நிபந்தனைகள் அதில் பூர்த்தியாகிவிடும்போது அதிலிருந்து குறிப்பிட்ட மக்களுக்காக குறிப்பிட்ட அளவு செல்வத்தை கட்டாயமாகக் கொடுக்க வேண்டும். இதைத்தான் ‘ஸகாத்’ என்று மார்க்கத்தில் கூறப்படுகின்றது.

இந்த ‘ஸகாத்’ மனிதனையும் அவனது ஆன்மாவையும் பரிசுத்தப்படுத்துகின்றது.

அல்லாஹ் கூறுகின்றான்:

خُذْ مِنْ أَمْوَالِهِمْ صَدَقَةً تُطَهِّرُهُمْ وَتُزَكِّيهِمْ بِهَا

அவர்களின் செல்வங்களில் இருந்து ‘ஸகாத்’ –தர்மத்தை வாங்குவீராக! அதன் மூலம் அவர்களை நீர் தூய்மைப்படுத்துகின்றீர், இன்னும் அவர்களை பரிசுத்தப்படுத்துகின்றீர். (அல்குர்ஆன் 9 : 103)

இந்த ‘ஸகாத்’ முஸ்லிம் சமுதாய மக்களுக்கு மத்தியில் அன்பையும் நெருக்கத்தையும் நேசத்தையும் ஏற்படுத்துகின்ற காரணங்களில் முக்கியமான ஒன்றாகும். இதன் மூலம் சமுதாயத்தில் (வசதியுள்ள) ஒருவர் (வசதியில்லாத) ஒருவருக்கு உதவுகின்றார்.

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## ‘ஸகாத்’தின் சட்டம் மற்றும் அதன் ஆதாரம்

‘ஸகாத்’ இது இஸ்லாமிய மார்க்கத்தின் கட்டாயக் கடமைகளில் ஒன்றாகும்; இஸ்லாமிய மார்க்கத்தின் ஐந்து தூண்களில் ஒன்றாகும்; தொழுகைக்கு அடுத்த மிக முக்கியமான கடமையாகும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

وَأَقِيمُوا الصَّلَاةَ وَآتُوا الزَّكَاةَ

தொழுகையை நிலை நிறுத்துங்கள்! ‘ஸகாத்’தை கொடுங்கள்!
(அல்குர்ஆன் 2 : 43)

خُذْ مِنْ أَمْوَالِهِمْ صَدَقَةً تُطَهِّرُهُمْ وَتُزَكِّيهِمْ بِهَا

அவர்களின் செல்வங்களில் இருந்து ‘ஸகாத்’ –தர்மத்தை வாங்குவீராக! அதன் மூலம் அவர்களை நீர் தூய்மைப்படுத்துகின்றீர், இன்னும் அவர்களை பரிசுத்தப்படுத்துகின்றீர். (அல்குர்ஆன் 9 : 103)

عَنِ ابْنِ عُمَرَ ﵄ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ بُنِيَ الْإِسْلَامُ عَلَى خَمْسٍ شَهَادَةِ

أَنْ لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ اللّٰهِ وَإِقَامِ الصَّلَاةِ وَإِيتَاءِ الزَّكَاةِ وَالْحَجِّ وَصَوْمِ رَمَضَانَ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ٨

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: இஸ்லாம் ஐந்தின் மீது அமைக்கப்பட்டுள்ளது. 1). நிச்சயமாக வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் அறவே இல்லை. மேலும் நிச்சயமாக முஹம்மது ﷺ அவர்கள் அல்லாஹ்வுடைய தூதர் ஆவார்கள் என்று சாட்சி கூறுவது. 2). தொழுகையை நிலைநிறுத்துவது. 3). 'ஸகாத்' கொடுப்பது. 4). ஹஜ் செய்வது. 5). ரமழான் மாதத்தில் நோன்பு நோற்பது.[1]

عَنِ ابْنِ عَبَّاسٍ رضي الله عنهما أَنَّ النَّبِيَّ ﷺ بَعَثَ مُعَاذًا رضي الله عنه إِلَى الْيَمَنِ فَقَالَ ادْعُهُمْ إِلَى شَهَادَةِ أَنْ لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ وَأَنِّي رَسُولُ اللّٰهِ فَإِنْ هُمْ أَطَاعُوا لِذٰلِكَ فَأَعْلِمْهُمْ أَنَّ اللّٰهَ قَدْ افْتَرَضَ عَلَيْهِمْ خَمْسَ صَلَوَاتٍ فِي كُلِّ يَوْمٍ وَلَيْلَةٍ فَإِنْ هُمْ أَطَاعُوا لِذٰلِكَ فَأَعْلِمْهُمْ أَنَّ اللّٰهَ افْتَرَضَ عَلَيْهِمْ صَدَقَةً فِي أَمْوَالِهِمْ تُؤْخَذُ مِنْ أَغْنِيَائِهِمْ وَتُرَدُّ عَلَى فُقَرَائِهِمْ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٣٩٥

நபி ﷺ அவர்கள் முஆத் رضي الله عنه அவர்களை ஏமன் நாட்டுக்கு (ஆளுநராக) அனுப்பினார்கள். அப்போது அவர்களுக்கு கூறினார்கள்: "நிச்சயமாக வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் அறவே இல்லை. மேலும் நிச்சயமாக நான் அல்லாஹ்வுடைய தூதர் ஆவேன் என்று சாட்சி கூறுவதற்கு" அவர்களை அழையுங்கள்! அவர்கள் அதற்கு கீழ்ப்படிந்தால், "நிச்சயமாக அல்லாஹ் அவர்கள் மீது ஒவ்வொரு பகலிலும் இரவிலும் ஐந்து நேரத் தொழுகையை கட்டாயக் கடமையாக்கியுள்ளான்" என்று அவர்களுக்கு அறிவியுங்கள். அவர்கள் அதற்கு(ம்) கீழ்ப்படிந்தால், "நிச்சயமாக அல்லாஹ் அவர்கள் மீது அவர்களின் செல்வங்களில் 'ஸகாத்' –தர்மத்தை கட்டாயக் கடமையாக்கியுள்ளான். அந்த தர்மம் அவர்களுடைய

1. அறிவிப்பாளர்: இப்னு உமர் رضي الله عنهما, நூல்: புகாரி, எண்: 8

செல்வந்தர்களிடமிருந்து வாங்கப்பட்டு அவர்களுடைய ஏழைகளுக்கு திரும்ப வழங்கப்படும்” என்று அவர்களுக்கு அறிவியுங்கள்![2]

‘ஸகாத்’ கட்டாயக் கடமை என்பதில் உலகில் உள்ள எல்லா முஸ்லிம்களும் ஒரே கருத்தில்தான் இருக்கின்றனர். ‘ஸகாத்’ கொடுக்க மறுப்பவர்களிடம் போர் செய்ய வேண்டும் என்பதில் நபித்தோழர்கள் ஒரே முடிவில் இருந்தனர்.

ஆகவே, ‘ஸகாத்’ கட்டாயக் கடமை என்பது குர்ஆன், சுன்னா மற்றும் இஜ்மாஃ - ஏகோபித்த முடிவு ஆகியவற்றைக் கொண்டு உறுதியான ஒரு சட்டமாகும்.

**மூன்றாவது சட்டவிளக்கம்**

## ‘ஸகாத்’ கொடுக்க மறுப்பவருடைய சட்டம்

ஒருவர் ‘ஸகாத்’ கடமை என்பதை தனது அறியாமையினால் மறுத்தால், அவர் அறியாமல் இருப்பதற்கு தகுந்த காரணமும் இருந்தால், உதாரணமாக அவர் புதிதாக இஸ்லாமிய மார்க்கத்தை தழுவி இருக்கின்றார். அல்லது முஸ்லிம்கள் உடைய ஊர் அல்லது நாட்டை விட்டு தூரமாக (முஸ்லிம்கள் அதிகமில்லாத இடத்தில்) வசிக்கின்றார். இத்தகைய மனிதருக்கு ‘ஸகாத்’ கடமை என்பதை தெரிவிக்க வேண்டும். உடனடியாக அவரை காஃபிர் என்று கூறக்கூடாது.

முஸ்லிம்களுக்கு மத்தியில், முஸ்லிம் நாட்டில் வசித்துக்கொண்டு ஒருவர் ‘ஸகாத்’ கடமை என்பதை மறுத்தால் அவர் مرتد -முர்தத் மதம் மாறியவர் ஆவார். ஆகவே, மதம் மாறியவருக்கு என்ன சட்டமோ அது அவர் மீது நிறைவேற்றப்படும். அவர் திருந்துவதற்கு மூன்று நாள்கள் அவகாசம் அளிக்கப்படும். மூன்று நாள்களுக்குள் அவர் திருந்தவில்லை என்றால் இஸ்லாமிய அரசாங்கம் அவரை கொன்றுவிட வேண்டும்.

‘ஸகாத்’ கடமை என்பதற்குரிய ஆதாரங்கள் குர்ஆன், சுன்னா மற்றும் இஜ்மாவில் வெளிப்படையாக உள்ளன. இது ஒருவருக்கு தெரியாது

2. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵄, நூல்: புகாரி, எண்: 1395

என்று கூறுவது சாத்தியமல்ல. ஆகவே, ஒருவர் இதை மறுத்தால் அவர் குர்ஆன், ஸுன்னாவை பொய்ப்பிக்கின்றார், அவற்றை மறுக்கின்றார் என்றுதான் பொருளாகும்.

**நான்காவது சட்டவிளக்கம்**

## கருமித்தனத்தால் 'ஸகாத்' கொடுக்க மறுப்பவருடைய சட்டம்

யார் ஸகாத் கட்டாய கடமை என்பதை நம்பிக்கை கொள்வதுடன் தனது கருமித்தனத்தால் 'ஸகாத்' கொடுக்க மறுப்பாரோ அவர் பெரும் பாவியாக கருதப்படுவார். ஆனால், அவர் இஸ்லாமை விட்டு வெளியேறிவிடுவார் என்று கூற முடியாது. ஏனெனில், 'ஸகாத்' என்பது மார்க்கத்தின் பிரிவு சட்டங்களில் ஒரு சட்டமாகும். ஆகவே, அதை விடுவதினால் மட்டும் ஒருவரை காஃபிர் என்று கூற முடியாது.

عَنْ أَبِي هُرَيْرَةَ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ مَا مِنْ صَاحِبِ كَنْزٍ لَا يُؤَدِّي زَكَاتَهُ إِلَّا أُحْمِيَ عَلَيْهِ فِي نَارِ جَهَنَّمَ فَيُجْعَلُ صَفَائِحَ فَيُكْوَى بِهَا جَنْبَاهُ وَجَبِينُهُ حَتَّى يَحْكُمَ اللّٰهُ بَيْنَ عِبَادِهِ فِي يَوْمٍ كَانَ مِقْدَارُهُ خَمْسِينَ أَلْفَ سَنَةٍ ثُمَّ يَرَى سَبِيلَهُ إِمَّا إِلَى الْجَنَّةِ وَإِمَّا إِلَى النَّارِ وَمَا مِنْ صَاحِبِ إِبِلٍ لَا يُؤَدِّي زَكَاتَهَا إِلَّا بُطِحَ لَهَا بِقَاعٍ قَرْقَرٍ كَأَوْفَرِ مَا كَانَتْ تَسْتَنُّ عَلَيْهِ كُلَّمَا مَضَى عَلَيْهِ أُخْرَاهَا رُدَّتْ عَلَيْهِ أُولَاهَا حَتَّى يَحْكُمَ اللّٰهُ بَيْنَ عِبَادِهِ فِي يَوْمٍ كَانَ مِقْدَارُهُ خَمْسِينَ أَلْفَ سَنَةٍ ثُمَّ يَرَى سَبِيلَهُ إِمَّا إِلَى الْجَنَّةِ وَإِمَّا إِلَى النَّارِ وَمَا مِنْ صَاحِبِ غَنَمٍ لَا يُؤَدِّي زَكَاتَهَا إِلَّا بُطِحَ لَهَا بِقَاعٍ قَرْقَرٍ كَأَوْفَرِ مَا كَانَتْ فَتَطَؤُهُ بِأَظْلَافِهَا وَتَنْطَحُهُ بِقُرُونِهَا لَيْسَ فِيهَا عَقْصَاءُ وَلَا جَلْحَاءُ كُلَّمَا مَضَى عَلَيْهِ أُخْرَاهَا رُدَّتْ عَلَيْهِ أُولَاهَا حَتَّى يَحْكُمَ اللّٰهُ

بَيْنَ عِبَادِهِ فِي يَوْمٍ كَانَ مِقْدَارُهُ خَمْسِينَ أَلْفَ سَنَةٍ مِمَّا تَعُدُّونَ ثُمَّ يَرَى سَبِيلَهُ إِمَّا إِلَى الْجَنَّةِ وَإِمَّا إِلَى النَّارِ رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٦٤٨

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: (பொன், வெள்ளி போன்ற) பொக்கிஷங்களை உடையவர் அவற்றுக்குரிய ஸகாத்தை நிறைவேற்றவில்லையாயின், மறுமை நாளில் அவற்றை நரக நெருப்பில் போடப்பட்டு, உருக்கி, தட்டுகளாக ஆக்கப்பட்டு, அவருடைய விலாப்புறங்களிலும், நெற்றியிலும் சூடு போடப்படும். இறுதியில் அல்லாஹ் தன் அடியார்களிடையே ஐம்பதாயிரம் ஆண்டுகளுக்கு சமமான ஒரு நாளில் தீர்ப்பளிப்பான். **பிறகு அவர் தனது பாதை சொர்க்கத்தின் பக்கமா அல்லது நரகத்தின் பக்கமா என்பதை பார்த்துக்கொள்வார்**.

ஒட்டகங்களின் உரிமையாளர் அவற்றுக்குரிய ஸகாத்தை நிறைவேற்றவில்லையாயின், (மறுமை நாளில்) அவர் ஒரு பொட்டல் திடலான வனாந்தரத்தில் முகம் குப்புற எறியப்படுவார். அவ்வொட்டகங்கள் முன்பிருந்ததைவிட மிகவும் கொழுத்தவையாக மாறி, அவர்மீது ஏறிச்செல்லும். அவ்வொட்டகங்களில் கடைசி ஒட்டகம் அவரை மிதித்துவிட்டுச் சென்றதும் மீண்டும் முதல் ஒட்டகம் அவர்மீது ஏவிவிடப்படும். இறுதியில் அல்லாஹ் தன் அடியார்களிடையே ஐம்பதாயிரம் ஆண்டுகளுக்கு சமமான ஒரு நாளில் தீர்ப்பளிப்பான். **பிறகு அவர் தனது பாதை சொர்க்கத்தின் பக்கமா அல்லது நரகத்தின் பக்கமா என்பதை பார்த்துக்கொள்வார்**.

ஆடுகளின் உரிமையாளர் அவற்றுக்குரிய ஸகாத்தை நிறைவேற்றவில்லையாயின் (மறுமை நாளில்) அவர் ஒரு பொட்டல் திடலான வனாந்தரத்தில் முகம் குப்புற எறியப்படுவார். அந்த ஆடுகள் முன்பிருந்ததைவிட மிகவும் கொழுத்தவையாக மாறி, அவர்மீது ஏறி, குளம்புகளால் அவரை மிதிக்கும்; கொம்புகளால் அவரை முட்டும். அவற்றில் கொம்புகள் வளைந்தவையும் இருக்காது; கொம்புகளற்றவையும் இருக்காது. அவற்றில் இறுதி ஆடு அவரைத் தாக்கிவிட்டுச் சென்றதும்

மீண்டும் முதலாவது ஆடு அவர்மீது ஏவிவிடப்படும். இறுதியில் அல்லாஹ் தன் அடியார்களிடையே நீங்கள் எண்ணிக் கணக்கிடும் நாட்களில் ஐம்பது ஆயிரம் ஆண்டுகளுக்கு சமமான ஒரு நாளில் தீர்ப்பளிப்பான். **பிறகு அவர் தனது பாதை சொர்க்கத்தின் பக்கமா அல்லது நரகத்தின் பக்கமா என்பதை பார்த்துக்கொள்வார்.**[3]

கருத்து: அவர் ‘ஸகாத்’ கொடுக்காததன் காரணமாக காஃபிராக ஆகியிருந்தால் அவர் சொர்க்கம் செல்வதற்கு வழி ஏதும் இருந்திருக்காது.

ஸகாத் கொடுக்க மறுப்பவரிடம் வலுக்கட்டாயமாக ‘ஸகாத்’ வசூலிக்கப்படும்; அத்துடன் அவருக்கு தண்டனையும் வழங்கப்படும். கொடுக்க மறுத்து அவர் சண்டை செய்தால் அவரிடம் சண்டை செய்து அல்லாஹ்வின் சட்டத்திற்கு அவர் பணியவைக்கப்படுவார்.

அல்லாஹ் கூறுகின்றான்:

فَإِنْ تَابُوا وَأَقَامُوا الصَّلَاةَ وَآتَوُا الزَّكَاةَ فَخَلُّوا سَبِيلَهُمْ

அவர்கள் இணைவைத்ததிலிருந்து திருந்தி (இஸ்லாமை ஏற்று)த் தொழுகையை நிலை நிறுத்தி, ‘ஸகாத்’தை கொடுத்தால் அவர்களின் வழியை நீங்கள் விட்டுவிடுங்கள்! (அல்குர்ஆன் 9 : 5)

عَنِ ابْنِ عُمَرَ ﵄ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ أُمِرْتُ أَنْ أُقَاتِلَ النَّاسَ حَتَّى يَشْهَدُوا أَنْ لَا إِلٰهَ إِلَّا اللهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ اللهِ وَيُقِيمُوا الصَّلَاةَ وَيُؤْتُوا الزَّكَاةَ فَإِذَا فَعَلُوا ذٰلِكَ عَصَمُوا مِنِّي دِمَاءَهُمْ وَأَمْوَالَهُمْ إِلَّا بِحَقِّ الْإِسْلَامِ وَحِسَابُهُمْ عَلَى اللهِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ٢٤

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: நிச்சயமாக வணக்கத்திற் குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் அறவே இல்லை. இன்னும், நிச்சயமாக முஹம்மது ﷺ அல்லாஹ்வுடைய தூதர் என்று

3. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: முஸ்லிம், எண்: 1648

அவர்கள் சாட்சி கூறி, இன்னும், தொழுகையை நிலை நிறுத்தி, ‘ஸகாத்’தை கொடுக்கின்ற வரை நான் மக்களிடம் போர் செய்ய வேண்டும் என்று கட்டளை இடப்பட்டுள்ளேன். அவர்கள் இவற்றை செய்துவிட்டால் என்னிடமிருந்து அவர்கள் தங்கள் உயிர்களையும் செல்வங்களையும் பாதுகாத்துக் கொள்வார்கள். ஆனால், இஸ்லாம் கூறுகின்ற உரிமை இருந்தாலே தவிர (நான் அவர்களின் உயிர், பொருளை எடுக்க மாட்டேன்). (இதற்கு மேல்) அவர்களின் விசாரணை அல்லாஹ்விடம் இருக்கின்றது.[4]

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ قَالَ لَمَّا تُوُفِّـيَ رَسُولُ اللهِ ﷺ وَكَانَ أَبُو بَكْرٍ ﷺ وَكَفَرَ مَنْ كَفَرَ مِنَ الْعَرَبِ فَقَالَ عُمَرُ ﷺ كَيْفَ تُقَاتِلُ النَّاسَ وَقَدْ قَالَ رَسُولُ اللهِ ﷺ أُمِرْتُ أَنْ أُقَاتِلَ النَّاسَ حَتَّى يَقُولُوا لَا إِلٰهَ إِلَّا اللهُ فَمَنْ قَالَهَا فَقَدْ عَصَمَ مِنِّي مَالَهُ وَنَفْسَهُ إِلَّا بِحَقِّهِ وَحِسَابُهُ عَلَى اللهِ فَقَالَ وَاللهِ لَأُقَاتِلَنَّ مَنْ فَرَّقَ بَيْنَ الصَّلَاةِ وَالزَّكَاةِ فَإِنَّ الزَّكَاةَ حَقُّ الْمَالِ وَاللهِ لَوْ مَنَعُونِي عَنَاقًا كَانُوا يُؤَدُّونَهَا إِلَى رَسُولِ اللهِ ﷺ لَقَاتَلْتُهُمْ عَلَى مَنْعِهَا قَالَ عُمَرُ ﷺ فَوَ اللهِ مَا هُوَ إِلَّا أَنْ قَدْ شَرَحَ اللهُ صَدْرَ أَبِي بَكْرٍ ﷺ فَعَرَفْتُ أَنَّهُ الْحَقُّ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٣٦٤**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் மரணித்தார்கள். அபூ பக்ர் ﷺ அவர்கள் பொறுப்பேற்றார்கள். அரபுகளில் பலர் நிராகரித்து விட்டார்கள். (அவ்வாறு சென்றவர்களில் ‘ஸகாத்’ கொடுக்க மாட்டோம் என்று மறுத்தவர்களும் இருந்தார்கள். அவர்களிடம் அபூ பக்ர் ﷺ அவர்கள் போர் செய்ய முடிவெடுத்தார்கள்.) அப்போது, உமர் ﷺ அவர்கள் அபூ பக்ர் ﷺ அவர்களிடம் நீங்கள் எப்படி இந்த மக்கள் மீது போர் தொடுக்க

4. அறிவிப்பாளர்: இப்னு உமர் ﷺ, நூல்: புகாரி, எண்: 24

முடியும்? ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் இப்படி கூறியிருக்கின்றார்களே, "நிச்சயமாக வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் அறவே இல்லை என்று அவர்கள் சாட்சி கூறுகின்ற வரை நான் மக்களிடம் போர் செய்ய வேண்டும் என்று கட்டளை இடப்பட்டுள்ளேன். யார் இதை (–இந்த சாட்சியத்தை) கூறிவிடுவாரோ அவர் என்னிடமிருந்து தமது உயிரையும் செல்வத்தையும் பாதுகாத்துக் கொள்வார். ஆனால், இஸ்லாம் கூறுகின்ற உரிமை இருந்தாலே தவிர (நான் அவர்களின் உயிர், பொருளை எடுக்க மாட்டேன்). (இதற்கு மேல்) அவருடைய விசாரணை அல்லாஹ்விடம் இருக்கின்றது." இதை செவியுற்ற அபூ பக்ர் ؓ கூறினார்கள்: "அல்லாஹ்வின் மீது ஆணையாக! தொழுகையையும் 'ஸகாத்'தையும் பிரித்துப்பார்ப்பவர் மீது நான் போர் தொடுப்பேன். நிச்சயமாக 'ஸகாத்' செல்வத்தில் உள்ள அல்லாஹ்வின் கடமையாகும். அவர்கள் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் கொடுத்துக் கொண்டிருந்த عَنَاق – அனாக்[5] ஓர் ஆட்டுக்குட்டியை இப்போது என்னிடம் 'ஸகாத்'தில் கொடுக்க மறுத்தால் நான் அவர்களிடம் அவர்கள் அதை கொடுக்க மறுத்ததால் போர் தொடுப்பேன். இதற்குப் பிறகு உமர் ؓ கூறுகிறார்கள்: "அல்லாஹ்வின் மீது ஆணையாக! அபூ பக்ர் ؓ உடைய நெஞ்சத்தில் அல்லாஹ் கொடுத்த விளக்கம்தான் இது. நிச்சயமாக இதுதான் உண்மை என்பதை நானும் பின்னர் புரிந்து கொண்டேன்.[6]

அபூ பக்ர் ؓ அவர்களுக்குப் பின்னர் வந்த மூன்று கலீஃபாக்களும் மற்ற எல்லா நபித்தோழர்களும் இதே கருத்தில்தான் இருந்தனர். ஆகவே, 'ஸகாத்' கொடுக்க மறுப்பவரிடம் போர் செய்ய வேண்டும் என்பது நபித்தோழர்களின் ஏகோபித்த முடிவாக இருந்தது. கருமித்தனத்தால் 'ஸகாத்' கொடுக்க மறுப்பவரும் இந்த ஆதாரங்களின் சட்டங்களுக்கு கீழ்தான் வருவார்.

5. அனாக் என்றால் ஒரு வருடம் பூர்த்தியாகாத ஆட்டுக்குட்டிக்கு கூறப்படும்.
6. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ؓ, நூல்: புகாரி, எண்: 1364

**ஐந்தாவது சட்டவிளக்கம்**

## ஸகாத் கடமையாகக்கூடிய பொருள்கள்

ஐந்து வகையான பொருள்களில் – செல்வங்களில் ‘ஸகாத்’ கடமையாகும்.

அவை:

**1). கால்நடைகள். அவை ஆடு, மாடு, ஒட்டகம் ஆகும்.**

عَنْ أَبِي ذَرٍّ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ مَا مِنْ صَاحِبِ إِبِلٍ وَلَا بَقَرٍ وَلَا غَنَمٍ لَا يُؤَدِّي زَكَاتَهَا إِلَّا جَاءَتْ يَوْمَ الْقِيَامَةِ أَعْظَمَ مَا كَانَتْ وَأَسْمَنَهُ تَنْطَحُهُ بِقُرُونِهَا وَتَطَؤُهُ بِأَخْفَافِهَا كُلَّمَا نَفِدَتْ أُخْرَاهَا أَعَادَتْ عَلَيْهِ أُولَاهَا حَتَّى يُقْضَى بَيْنَ النَّاسِ رَوَاهُ النَّسَائِيُّ بِرَقْمِ ٢٤١٣ وروَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٦٥٢

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: ஒட்டகம் உடையவர் அல்லது மாடுகளை உடையவர் அல்லது ஆடுகளை உடையவர் அவற்றின் ‘ஸகாத்’துகளை நிறைவேற்றவில்லை என்றால் அவை மறுமை நாளில் (இவ்வுலகில்) இருந்ததைவிட கொழுத்ததாகவும் மிகப் பெரியதாகவும் வரும். அவை அவரை தங்களது கொம்புகளால் குத்தும். தமது கால் குளம்புகளால் அவரை மிதிக்கும். அவற்றில் இறுதியானது வந்து முடிந்துவிட்டால் அவற்றில் முதலாவது மீண்டும் வரும். இப்படியாக மக்களுக்கு மத்தியில் தீர்ப்பளிக்கப்படுகின்ற வரை (அவருக்கு இந்த தண்டனை) நீடிக்கும்.[7]

**2). தங்கம், வெள்ளி அல்லது அதன் மதிப்பில் மக்களின் பயன்பாட்டில் இருக்கக்கூடிய கரன்சி நாணயங்கள்.**

அல்லாஹ் கூறுகின்றான்:

7. அறிவிப்பாளர்: அபூ தர் ﵁, நூல்: நசாயி, எண்: 2413, நூல்: முஸ்லிம், எண்: 1652

وَالَّذِينَ يَكْنِزُونَ الذَّهَبَ وَالْفِضَّةَ وَلَا يُنْفِقُونَهَا فِي سَبِيلِ اللَّهِ فَبَشِّرْهُمْ بِعَذَابٍ أَلِيمٍ

எவர்கள் தங்கத்தையும், வெள்ளியையும் சேகரித்து வைத்துக் கொண்டு, அதை அல்லாஹ்வுடைய பாதையில் செலவு செய்யாதிருக்கின்றனரோ அவர்களுக்கு (நபியே!) நீர் துன்புறுத்தும் வேதனையை நற்செய்தியாகக் கூறுவீராக. (அல்குர்ஆன் 9 : 34)

عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ ﷺ مَا مِنْ صَاحِبِ ذَهَبٍ وَلَا فِضَّةٍ لَا يُؤَدِّي مِنْهَا حَقَّهَا إِلَّا إِذَا كَانَ يَوْمُ الْقِيَامَةِ صُفِّحَتْ لَهُ صَفَائِحُ مِنْ نَارٍ فَأُحْمِيَ عَلَيْهَا فِي نَارِ جَهَنَّمَ فَيُكْوَى بِهَا جَنْبُهُ وَجَبِينُهُ وَظَهْرُهُ كُلَّمَا بَرَدَتْ أُعِيدَتْ لَهُ رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٦٤٧

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: தங்கம் அல்லது வெள்ளியை உடையவர் அதில் கடமையான ('ஸகாத்')தை அதிலிருந்து கொடுக்க வில்லை என்றால் மறுமை நாளில் அவை நரக நெருப்பின் தட்டுகளாக ஆக்கப்பட்டு நரக நெருப்பில் பழுக்க காய்ச்சப்பட்டு பிறகு, அவற்றின் மூலம் அந்த மனிதனின் விலாக்களிலும் அவனது நெற்றியிலும் அவனது முதுகிலும் சூடு போடப்படும். அவை குளிர்ந்துவிடும்போதெல்லாம் அவருக்கு அவை மீண்டும் (சூடுகாட்டடப்பட்டு) கொண்டுவரப்படும்.[8]

**3). வியாபாரப் பொருள்கள்**

அதாவது, இலாப நோக்கத்துடன் விற்பது, வாங்குவதற்காக ஏற்பாடு செய்து வைக்கப்பட்டுள்ள எல்லாப் பொருள்களும் வியாபாரப் பொருள்கள் என்ற சட்டத்தின் கீழ் வரும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا أَنْفِقُوا مِنْ طَيِّبَاتِ مَا كَسَبْتُمْ

8. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: முஸ்லிம், எண்: 1647

நம்பிக்கையாளர்களே! நீங்கள் சம்பாதித்தவற்றில் நல்ல பொருள்களில் இருந்து தர்மம் செய்யுங்கள்! (அல்குர்ஆன் 2 : 267)

இந்த வசனத்தின் நோக்கம் வியாபார பொருள்களுக்கான ‘ஸகாத்’தை கொடுப்பது என்று பெரும்பாலான அறிஞர்கள் கூறுகிறார்கள்.

**4). தானியங்கள், பழங்கள்**

அதாவது, தானியங்கள் என்றால் கோதுமை, பார்லி, அரிசி போன்ற சேமித்து வைக்கும்படியான எல்லா வித்துக்களும் இதில் அடங்கும்.

பழங்கள் என்றால் பேரித்தம் பழம், உலர்ந்த திராட்சை ஆகும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

يَاأَيُّهَا الَّذِينَ آمَنُوا أَنْفِقُوا مِنْ طَيِّبَاتِ مَا كَسَبْتُمْ
وَمِمَّا أَخْرَجْنَا لَكُمْ مِنَ الْأَرْضِ

நம்பிக்கையாளர்களே! நீங்கள் சம்பாதித்தவற்றில் நல்ல பொருள்களிலிருந்தும் பூமியில் நாம் உங்களுக்கு உற்பத்தி செய்து கொடுத்தவற்றிலிருந்தும் தர்மம் செய்யுங்கள்! (அல்குர்ஆன் 2 : 267)

وَآتُوا حَقَّهُ يَوْمَ حَصَادِهِ

அதனுடைய கடமையை (–‘ஸகாத்’தை) அதை அறுவடை செய்யும் அன்று கொடுத்துவிடுங்கள்! (அல்குர்ஆன் 6 : 141)

عَنْ عَبْدِ اللهِ بْنِ عُمَرَ ﵄ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ فِيمَا سَقَتِ السَّمَاءُ وَالْعُيُونُ أَوْ كَانَ عَثَرِيًّا الْعُشْرُ وَمَا سُقِيَ بِالنَّضْحِ نِصْفُ الْعُشْرِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٣٨٨

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: வானம் அல்லது நீரோடைகள் நீர் பாய்ச்சியதில் அல்லது தானாக நீரை உறிஞ்சி வளர்ந்ததில் பத்தில் ஒன்று

‘ஸகாத்’தாக கொடுக்கப்பட வேண்டும். நீர் இறைத்து நீர் பாய்ச்சப்பட்டதில் இருபதில் ஒன்று ‘ஸகாத்’தாக கொடுக்கப்பட வேண்டும்.[9]

### 5). கனிமங்கள் மற்றும் புதையல்கள்

معدن – கனிமங்கள் என்றால் பூமிக்குள் படைக்கப்பட்டு இருக்கின்ற பொருள்கள் ஆகும். மனித சக்திக்கு அதில் எவ்வித சம்பந்தமும் இருக்காது. அந்த பொருள்கள் வியாபார சந்தையில் விலைமதிப்புள்ளதாக இருக்கும். உதாரணமாக, தங்கம், வெள்ளி, பித்தளை இன்னும் இவை போன்ற பொருள்கள்.

ركاز ரகாஸ் என்றால் முந்திய காலங்களில் பூமியில் புதைக்கப்பட்ட செல்வங்கள் –புதையல்கள் ஆகும்.

கனிமங்களிலும் புதையல்களிலும் ‘ஸகாத்’ கடமை என்பதற்கு ஆதாரம்:

அல்லாஹ் கூறுகின்றான்:

يَاأَيُّهَا الَّذِينَ آمَنُوا أَنْفِقُوا مِنْ طَيِّبَاتِ مَا كَسَبْتُمْ
وَمِمَّا أَخْرَجْنَا لَكُمْ مِنَ الْأَرْضِ

நம்பிக்கையாளர்களே! நீங்கள் சம்பாதித்தவற்றில் நல்ல பொருள்களிலிருந்தும் பூமியில் நாம் உங்களுக்கு உற்பத்தி செய்து கொடுத்தவற்றிலிருந்தும் தர்மம் செய்யுங்கள்! (அல்குர்ஆன் 2 : 267)

இந்த வசனத்தின் விளக்கத்தில், பூமியில் விளையக்கூடியவைகள், கனிமங்கள், புதையல்கள் ஆகியவற்றிலிருந்து ‘ஸகாத்’ கொடுப்பதை அல்லாஹ் கூறுவதாக இமாம் குர்த்துபி ﵀ கூறுகிறார்கள்.

عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ الْعَجْمَاءُ جُبَارٌ وَالْبِئْرُ جُبَارٌ وَالْمَعْدِنُ جُبَارٌ وَفِي الرِّكَازِ الْخُمُس رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٤٠٣

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: கால்நடைகள் மன்னிக்கப்பட்டதாகும்.

9. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு உமர் ﵄, நூல்: புகாரி, எண்: 1388

கிணறு மன்னிக்கப்பட்டதாகும். சுரங்கம் மன்னிக்கப்பட்டதாகும். புதையலில் ஐந்தில் ஒன்று இருக்கின்றது.[10]

**கருத்து:** ஒருவருடைய கால்நடை மேயும்போது யாரையும் முட்டி காயப்படுத்திவிட்டால் அதற்காக உரிமையாளர் குற்றம் பிடிக்கப்பட மாட்டார். அவரிடம் பழிதீர்க்கப்படாது. அதற்காக பரிகாரமும் வழங்கப்படாது. அவ்வாறே, ஒருவர் பொதுவான இடத்தில் அல்லது தனக்கு சொந்தமான இடத்தில் ஒரு கிணறை தோண்டுகிறார். அந்த கிணற்றில் ஒருவர் விழுந்து அவருக்கு ஏதும் ஆகிவிட்டால் அதற்காக கிணற்றை தோண்டியவர் குற்றம் பிடிக்கப்பட மாட்டார். அவர் நஷ்டஈடு கொடுக்க வேண்டிய அவசியமில்லை. ஒருவர் சுரங்கம் ஒன்றில் வேலை செய்வதற்காக ஒருவரை வேலைக்கு அமர்த்துகிறார். அதில் வேலை செய்யும்போது அந்த பணியாளர் இறந்துவிடுகிறார் என்றால், வேலைக்கு அமர்த்தியவர் மீது அது குற்றமாகாது. அவர் நஷ்டஈடு கொடுக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை.[11]

கனிமங்களில் 'ஸகாத்' கடமை என்பதில் சமுதாய அறிஞர்கள் ஒரே கருத்தில் இருக்கின்றனர்.

**ஆறாவது சட்டவிளக்கம்**

## 'ஸகாத்' உடைய தத்துவங்கள் என்ன? யார் மீது 'ஸகாத்' கடமை?

'ஸகாத்'தை அல்லாஹ் கடமையாக்கியதில் உள்ள நன்மைகளும், தத்துவங்களும் ஏராளம் உள்ளன. அவற்றில் சிலவற்றையும் ஸகாத் யார் மீது கடமை என்பதையும் அதற்குரிய நிபந்தனைகளையும் பின்வருகின்ற வரிகளில் பார்ப்போம்.

**'ஸகாத்' கடமையாக்கப்பட்டதில் உள்ள தத்துவங்கள்**

பல உயர்ந்த தத்துவங்களுக்காகவும் சிறந்த நோக்கங்களுக்காகவும்

10, அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﷺ நூல்: புகாரி 1403
11. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﷺ, நூல்: புகாரி, எண்: 1403, 6401

'ஸகாத்' இஸ்லாமிய மார்க்கத்தில் சட்டமாக்கப்பட்டது. அவை எண்ணி முடிக்க முடியாதவை. அவற்றில் சில பின்வருமாறு:

1). செல்வத்தை சுத்தப்படுத்துவது, அதை வளர்ப்பது, அதில் அபிவிருத்தியை உண்டாக்குவது, செல்வத்தினால் விளையும் தீமைகளையும் அழிவுகளையும் போக்குவது, ஆபத்துகளில் இருந்து செல்வத்தை பாதுகாப்பது.

2). 'ஸகாத்' கொடுப்பவரை கருமித்தனத்திலிருந்தும் பாவங்கள் எனும் அசுத்தங்களிலிருந்தும் சுத்தப்படுத்துவது, அல்லாஹ்வின் பாதையில் தர்மம் செய்வதற்கு அவருக்கு பயிற்சி அளிப்பது.

3). ஏழைகளுக்கு உதவி ஒத்தாசை செய்வது, முடியாதவர்கள், வறியவர்கள், இல்லாதவர்களுடைய தேவையை பூர்த்தி செய்வது.

4). சமுதாயத்தின் உறுப்பினர்களுக்கு மத்தியில் பரஸ்பர அன்பு, ஒருவருக்கொருவர் உதவுதல், பிறருடைய தேவையை நிறைவேற்றுதல் போன்ற சிறந்த குணங்களை உறுதிப்படுத்துவது.

செல்வந்தர்கள் ஏழைகளுக்கு தங்கள் செல்வத்தின் 'ஸகாத்'தை கொடுக்கும்போது அந்த ஏழைகளின் உள்ளத்தில் தங்கள் மீது ஏதாவது பொறாமை, குரோதம் போன்ற தீய குணம் இருந்தால் அதை நீக்கிவிட முடியும். இதனால் சமுதாய மக்களுக்கு மத்தியில் அமைதியும் பாதுகாப்பும் நிலவி குரோதங்கள் இல்லாமல் போய்விடும்.

5). அல்லாஹ் கொடுத்த அருட்கொடைகளுக்கு நன்றி செலுத்துவது, அல்லாஹ்விற்கு கீழ்ப்படிவது, அவனுடைய கட்டளையை நிறைவேற்றுவது.

6). 'ஸகாத்' கொடுப்பவரின் இறைநம்பிக்கை தூய்மையாக இருக்கின்றது. தான் விரும்புகின்ற செல்வத்தை ஒருவர் தர்மம் செய்கின்றார் என்றால் அதற்கு காரணம், அதைவிட அதிகமாக அவர் நேசிக்கின்ற அல்லாஹ்விற்காக அவர் தர்மம் செய்கிறார். தர்மம் صدقة – ஸதகாவிற்கு ஸதகா என்று பெயர் வந்ததற்கு காரணம்

அதை கொடுப்பவர் அல்லாஹ்வின் அன்பையும் பொருத்தத்தையும் صدق – ஸித்க் உண்மையான உள்ளத்தோடு தேடுகிறார் என்பதாகும்.

7). ‘ஸகாத்’ அல்லாஹ்வின் பொருத்தம் கிடைப்பதற்கும் நன்மைகள் இறங்குவதற்கும் பாவங்கள் போக்கப்படுவதற்கும் காரணமாக இருக்கின்றது.

**‘ஸகாத்’ யார் மீது கடமை?**

பின்வரக்கூடிய நிபந்தனைகள் யாரிடம் பெற்றுக்கொள்ளப்படுமோ அவர் மீது ‘ஸகாத்’ கடமையாகும்.

அந்த நிபந்தனைகள்:

**1). முஸ்லிமாக இருக்க வேண்டும்.**

ஆகவே, காஃபிர் – நிராகரிப்பாளர் மீது ‘ஸகாத்’ கடமையல்ல. ‘ஸகாத்’ என்பது ஒரு முஸ்லிம் அல்லாஹ்விற்காக செய்ய வேண்டிய பொருள் சார்ந்த ஒரு வணக்கமாகும். காஃபிர் – நிராகரிப்பாளர் இஸ்லாமிய மார்க்கத்தை ஏற்றுக்கொள்ளாத வரை அவரிடமிருந்து இபாதத்துகள் அங்கீகரிக்கப்படாது.

அல்லாஹ் கூறுகின்றான்:

وَمَا مَنَعَهُمْ أَنْ تُقْبَلَ مِنْهُمْ نَفَقَاتُهُمْ إِلَّا أَنَّهُمْ كَفَرُوا بِاللَّهِ وَبِرَسُولِهِ

அவர்களின் தர்மங்கள் அவர்களிடமிருந்து ஏற்றுக்கொள்ளப்படுவதை அவர்கள் அல்லாஹ்வையும் அவனது தூதரையும் நிராகரித்ததைத் தவிர வேறு எதுவும் தடுக்கவில்லை. (அல்குர்ஆன் 9 : 54)

காஃபிரிடமிருந்து வணக்க வழிபாடுகள் ஏற்றுக்கொள்ளப்படாது என்பதால் அதை அவர்கள் செய்ய வேண்டும் என்று கட்டாயப்படுத்துவதில் எவ்வித பயனும் இல்லை.

ஆகவேதான், அபூ பக்ர் ﵁ அவர்கள் இந்த ‘ஸகாத்’தைப் பற்றி குறிப்பிடும்போது பின்வருமாறு கூறினார்கள்:

هٰذِهِ فَرِيضَةُ الصَّدَقَةِ الَّتِي فَرَضَ رَسُولُ اللهِ ﷺ عَلَى الْمُسْلِمِينَ وَالَّتِي أَمَرَ اللهُ بِهَا رَسُولَهُ فَمَنْ سُئِلَهَا مِنَ الْمُسْلِمِينَ عَلَى وَجْهِهَا فَلْيُعْطِهَا وَمَنْ سُئِلَ فَوْقَهَا فَلَا يُعْطِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٣٦٢ وروَاهُ أَبُوْ دَاوُدُ بِرَقْمِ ١٣٣٩

இதுதான் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் முஸ்லிம்கள் மீது கட்டாயக் கடமையாக்கிய ஸதகா – ‘ஸகாத்’ என்ற கடமையாகும். மேலும், இந்த கடமையை அல்லாஹ் தனது நபிக்கு கட்டளையிட்டிருக்கின்றான். ஆகவே, முஸ்லிம்களில் யாரிடம் இந்த ‘ஸகாத்’ அதற்குரிய முறையுடன் கேட்கப்படுகின்றதோ அவர் அதை கொடுக்கட்டும். யாரிடம் அதற்கு மேலாக (அதிகப்படியாக) கேட்கப்படுகின்றதோ அவர் (அதை) கொடுக்க வேண்டாம்.[12]

எனினும், குர்ஆனில் கூறப்பட்ட உட்பிரிவு சட்டங்கள் எல்லாம் காஃபிருக்கும் பொருந்தும். மறுமையில் அவருக்கு தண்டனை கொடுக்கப்படும்போது இந்த உட்பிரிவு சட்டங்களை அவர் பின்பற்றாததற்கும் சேர்த்து தண்டனை கொடுக்கப்படுவார்.

**2). சுதந்திரமானவராக இருக்க வேண்டும்.**

ஆகவே, அடிமைகள் மீது ‘ஸகாத்’ கடமையாகாது. அடிமை தனக்கு சொந்தமானது என்று எதையும் கூற முடியாது. அடிமையும் அவரிடம் இருக்கின்ற செல்வமும் அவரின் எஜமானருக்கு உரியது. ஆகவே, அடிமையிடம் ஏதும் செல்வம் இருந்தால் அதற்கு அவருடைய எஜமானர்தான் ‘ஸகாத்’ கொடுக்க வேண்டும்.

அடிமையில் இரு வகை உள்ளனர். ஒருவர் தனது எஜமானனிடம் இருந்து விடுதலையை எதிர்பார்க்காமல் அவருக்கு நிரந்தரமாக அடிமையாக இருப்பவர். மற்றொருவர் தனது எஜமானனிடம் ஒரு தொகையை நான் உங்களுக்கு தந்து விடுகின்றேன், என்னை உரிமையிட்டுவிடுங்கள் என்று ஒப்பந்தம் செய்துகொண்டவர். இந்த

12. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ﵁, நூல்: புகாரி 1362, அபூ தாவூத் 1339

வகை அடிமைக்கு مكاتب – முகாதப் என்று கூறப்படும். இருவகை அடிமைகள் மீதும் 'ஸகாத்' கடமை இல்லை.

**3). நிஸாப் – 'ஸகாத்' கடமையாகுவதற்குள்ள குறிப்பிட்ட அளவு செல்வம் தனக்கு முழுமையாக இருப்பது மற்றும் அந்த செல்வம் தன்னிடம் நிரந்தரமாக, சொந்தமாக இருப்பது.**

**4. அந்த செல்வம் தனது அத்தியாவசிய தேவைகளை விட்டு மேல்மிச்சமாக இருக்க வேண்டும்.**

அத்தியாவசிய தேவை என்பது உணவு, உடை, உறைவிடம் ஆகும். ஏனெனில், 'ஸகாத்' என்பது ஏழைகளுக்கு உதவுவதற்காக கடமையாக்கப்பட்டது. எதை செல்வ நிலை என்று எடுத்துக் கொள்ளப்படுமோ அந்த அளவைத்தான் நிஸாப் என்று கூறப்படுகின்றது. அந்த நிஸாப் தனக்கு சொந்தமாக இருக்க வேண்டும். அந்த குறிப்பிட்ட அளவு செல்வம் இல்லையென்றால் அவர் மீது 'ஸகாத்' கடமையாகாது.

எதில் தனக்கு முழு உரிமை இல்லையோ, அல்லது எது அழிந்துவிடும் என்ற அபாயத்தில் இருக்கின்றதோ அந்த செல்வத்தில் 'ஸகாத்' கடமையாகாது.

**عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِي ﷺ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ لَيْسَ فِيمَا دُونَ خَمْسِ ذَوْدٍ صَدَقَةٌ مِنَ الْإِبِلِ وَلَيْسَ فِيمَا دُونَ خَمْسِ أَوَاقٍ صَدَقَةٌ وَلَيْسَ فِيمَا دُونَ خَمْسَةِ أَوْسُقٍ صَدَقَةٌ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٣٥٥**

ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: ஐந்து ஒட்டகங்களுக்கு குறைவாக இருந்தால் 'ஸகாத்' கடமை இல்லை. ஐந்து ஊக்கியாவிற்கு குறைவாக வெள்ளி இருந்தால் 'ஸகாத்' கடமை இல்லை. ஐந்து 'வஸ்க்'களுக்கு[13] குறைவாக தானியம் இருந்தால் 'ஸகாத்' கடமை இல்லை.[14]

13. ஊக்கியா, வஸ்க் உடைய விளக்கம் பின்னால் வர இருக்கின்றது.

14. அறிவிப்பாளர்: அபூ சயீது அல்குத்ரி ﵁, நூல்: புகாரி, எண்: 1355

**5). செல்வம் ஒரு வருடத்தை பூர்த்தி செய்திருக்க வேண்டும்.**

அதாவது, 'ஸகாத்' உடைய நிஸாப் தனது கையில் கிடைக்கப் பெற்றதிலிருந்து சந்திர மாதங்களில் பன்னிரெண்டு மாதங்கள் முழுமை அடைந்திருக்க வேண்டும்.

ஆதாரம்:

**عَنْ عَائِشَةَ ﵂ قَالَتْ سَمِعْتُ رَسُولَ اللّٰهِ ﷺ يَقُولُ لَا زَكَاةَ فِي مَالٍ حَتَّى يَحُولَ عَلَيْهِ الْحَوْلُ رَوَاهُ ابْنُ مَاجَةَ بِرَقْمِ ١٧٨٢**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூற தான் செவியுற்றதாக ஆயிஷா ﵂ கூறுகிறார்கள்: ஒரு பொருள் மீது ஓர் ஆண்டு சுற்றிவருகின்ற வரை அதில் 'ஸகாத்' கடமை இல்லை.[15]

செல்வம் ஓர் ஆண்டு பூர்த்தியாகி இருக்க வேண்டும் என்ற நிபந்தனை கால் நடைகள், தங்கம், வெள்ளி, நாணயங்கள், மற்றும் வியாபாரப் பொருள்கள் மீது 'ஸகாத்' கடமையாகுவதற்குரிய நிபந்தனை ஆகும். ஆனால், விவசாயங்கள், கனிகள், கனிமங்கள், மற்றும் புதையல் ஆகியவற்றில் 'ஸகாத்' கடமையாகுவதற்கு அவை ஒரு வருடம் பூர்த்தியாகி இருக்க வேண்டும் என்ற நிபந்தனை இல்லை.

அல்லாஹ் கூறுகின்றான்:

**وَآتُوا حَقَّهُ يَوْمَ حَصَادِهِ**

அதனுடைய கடமையை (–'ஸகாத்'தை) அதை அறுவடை செய்யும் நாளில் கொடுத்துவிடுங்கள்! (அல்குர்ஆன் 6 : 141)

கனிமங்களும் புதையல்களும் பூமியில் இருந்து கிடைக்கக்கூடிய அதிகப்படியான செல்வங்களாகும். ஆகவே, அவற்றில் 'ஸகாத்' கடமையாகுவதற்கு அவை ஓர் ஆண்டு நிறைவடைந்திருக்க வேண்டும் என்ற நிபந்தனை கவனிக்கப்படுவதில்லை.

15. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: இப்னு மாஜா, எண்: 1782

**ஏழாவது சட்டவிளக்கம்**

## ‘ஸகாத்’ உடைய வகைகள்

‘ஸகாத்’ இரு வகைப்படும்.

1). செல்வங்களுக்குரிய ‘ஸகாத்’.
இது செல்வத்தோடு சம்பந்தப்பட்டதாகும்.

2). உடலுக்குரிய ‘ஸகாத்’.
இது உடலுடன் சம்மந்தப்பட்டதாகும். இது நோன்பு பெருநாளை முன்னிட்டு கொடுக்கப்படுகின்ற ஸதக்கத்துல் ஃபித்ர் ஆகும்.

**எட்டாவது சட்டவிளக்கம்**

## கடனுக்குரிய ‘ஸகாத்’

கடன் வாங்கியவர் வறியவராக இருந்தால் கடன் கொடுத்தவரின் கைக்கு அந்த கடன் எப்போது திரும்ப வருகிறதோ அப்போதிலிருந்து அது ஒரு வருடம் பூர்த்தியாகிவிடும்போது அந்த வருடத்திற்கு மட்டும் ‘ஸகாத்’ கொடுத்தால் போதுமானதாகும். அது கடன் வாங்கியவரின் கையில் எத்தனை வருடங்கள் இருந்தாலும் சரி.

கடன் வாங்கியவர் செல்வந்தராகவும் கடனை திரும்ப கொடுப்பதற்கு ஆற்றல் உடையவராகவும் இருந்தால் கடன் கொடுத்தவர் ஒவ்வொரு ஆண்டுக்கும் அந்த செல்வத்திற்குரிய ‘ஸகாத்’தை கொடுக்க வேண்டும். ஏனெனில், இந்த சூழ்நிலையில் அந்த செல்வம் தன்னிடம் (-கடன் கொடுத்தவரிடம்) இருப்பதைப் போன்றுதான்.

-------------------

DARUL HUDA , CHENNAI - 1 | muftiomar@gmail.com | 044 25247866

இரண்டாவது பாடம்

## الباب الثاني في زكاة الذهب والفضة

## தங்கம், வெள்ளி உடைய ‘ஸகாத்’

இந்த பாடத்தில் பல சட்டவிளக்கங்கள் உள்ளன

**முதல் சட்டவிளக்கம்**

### தங்கம், வெள்ளியில் ‘ஸகாத்’ உடைய சட்டம் இன்னும் அதன் ஆதாரங்கள்

தங்கம், வெள்ளியில் ‘ஸகாத்’ கடமையாக இருக்கின்றது. தங்கம் அல்லது வெள்ளி வைத்திருப்பவர்கள் கண்டிப்பாக அதிலிருந்து ‘ஸகாத்’தை நிறைவேற்ற வேண்டும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

وَالَّذِينَ يَكْنِزُونَ الذَّهَبَ وَالْفِضَّةَ وَلَا يُنْفِقُونَهَا فِي سَبِيلِ اللّٰهِ فَبَشِّرْهُمْ بِعَذَابٍ أَلِيمٍ

எவர்கள் தங்கத்தையும் வெள்ளியையும் சேகரித்துவிட்டு, அதை அல்லாஹ்வுடைய பாதையில் தர்மம் செய்யவில்லையோ அவர்களுக்கு வலிமிக்க வேதனை உண்டு என்று நற்செய்தி கூறுவீராக!

(அல்குர்ஆன் 9 : 34)

**கருத்து:** இப்படிப்பட்ட எச்சரிக்கையை அல்லாஹ் கூறுகின்றான்

என்றால் கண்டிப்பாக அது ஃபர்ழான ஒன்றை செய்யாததினால்தான் இருக்கும் என்பதை விளங்க முடிகின்றது.

عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ مَا مِنْ صَاحِبِ ذَهَبٍ وَلَا فِضَّةٍ لَا يُؤَدِّي مِنْهَا حَقَّهَا إِلَّا إِذَا كَانَ يَوْمُ الْقِيَامَةِ صُفِّحَتْ لَهُ صَفَائِحُ مِنْ نَارٍ فَأُحْمِيَ عَلَيْهَا فِي نَارِ جَهَنَّمَ فَيُكْوَى بِهَا جَنْبُهُ وَجَبِينُهُ وَظَهْرُهُ كُلَّمَا بَرَدَتْ أُعِيدَتْ لَهُ رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٦٤٧

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: தங்கம் அல்லது வெள்ளி வைத்திருப்பவர் அதிலிருந்து அதில் கடமையான (‘ஸகாத்’)தை கொடுக்க வில்லை என்றால் மறுமை நாளில் அதை நரக நெருப்பின் தட்டுகளாக ஆக்கப்பட்டு நரக நெருப்பில் பழுக்க காய்ச்சப்பட்டு பிறகு, அவற்றின் மூலம் அந்த மனிதனின் இரு விலாக்களிலும் அவனது நெற்றியிலும் அவனது முதுகிலும் சூடு போடப்படும். அவை குளிர்ந்து விடும்போதெல்லாம் அவருக்கு அவை மீண்டும் (சூடாக்கப்பட்டு) கொண்டு வரப்படும்.[16]

ஒருவரிடம் இரு நூறு திர்ஹம் இருந்தால் அவர் ஐந்து திர்ஹம் ‘ஸகாத்’ கொடுக்க வேண்டும் என்றும் தங்கம் இருபது مثقال மிஸ்கால்[17] இருந்து அதன் விலை இரு நூறு திர்ஹமாக இருந்தால் அதிலும் அவர் ‘ஸகாத்’ கொடுக்க வேண்டும் என்றும் அறிஞர்கள் அனைவரும் கூறுகிறார்கள்.

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## தங்கம், வெள்ளியில் கொடுக்கப்பட வேண்டிய ‘ஸகாத்’ உடைய அளவு

தங்கம், வெள்ளியில் கொடுக்கப்பட வேண்டிய ‘ஸகாத்’ உடைய

16. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: முஸ்லிம், எண்: 1647

17. மிஸ்கால் என்பது 4.25 கிராம் அல்லது 4.6 கிராம் ஆகும். இன்றைய காலத்தில் இது ஐந்து கிராம் என்று கணக்கிடப்படுகிறது.

அளவு நாற்பதில் ஒன்றாகும். அதாவது இருபது தங்க தீனாருக்கு அரை தீனார் கொடுக்க வேண்டும். அதைவிட எவ்வளவு அதிகம் இருக்கின்றதோ அதற்கு ஏற்ப நாற்பதில் ஒன்று கொடுக்க வேண்டும். இரு நூறு வெள்ளி திர்ஹமுக்கு ஐந்து திர்ஹம் 'ஸகாத்' கொடுக்க வேண்டும். அதைவிட எவ்வளவு அதிகம் இருக்கின்றதோ அதற்கு ஏற்ப அளவு கூடிக்கொண்டே இருக்கும்.

**وَفِي الرِّقَّةِ رُبْعُ الْعُشْرِ فَإِنْ لَمْ تَكُنْ إِلَّا تِسْعِينَ وَمِائَةً فَلَيْسَ فِيهَا شَيْءٌ إِلَّا أَنْ يَشَاءَ رَبُّهَا**

அபூ பக்ர் ﵁ அவர்கள் 'ஸகாத்' குறித்து அனஸ் இப்னு மாலிக் ﵁ அவர்களுக்கு எழுதிய கடிதத்தில் கூறுகிறார்கள்: வெள்ளியில் நாற்பதில் ஒன்று கொடுக்க வேண்டும். திர்ஹம் (வெள்ளி நாணயம்) நூற்றி தொண்ணூறு இருந்தால் அதில் 'ஸகாத்' கடமை இல்லை, அதன் உரிமையாளர் (உபரியாக கொடுக்க) விரும்பினாலே தவிர.[18]

**عَنْ عَلِيٍّ ﵁ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ فَإِذَا كَانَتْ لَكَ مِائَتَا دِرْهَمٍ وَحَالَ عَلَيْهَا الْحَوْلُ فَفِيهَا خَمْسَةُ دَرَاهِمَ وَلَيْسَ عَلَيْكَ شَيْءٌ يَعْنِي فِي الذَّهَبِ حَتَّى يَكُونَ لَكَ عِشْرُونَ دِينَارًا فَإِذَا كَانَ لَكَ عِشْرُونَ دِينَارًا وَحَالَ عَلَيْهَا الْحَوْلُ فَفِيهَا نِصْفُ دِينَارٍ فَمَا زَادَ فَبِحِسَابِ ذَلِكَ رَوَاهُ أَبُوْ دَاوُدُ بِرَقْمِ ١٣٤٢**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: உம்மிடம் இரு நூறு திர்ஹம் இருந்து அவற்றின் மீது ஓர் ஆண்டு சுற்றி வந்துவிட்டால் அவற்றில் ஐந்து திர்ஹம் 'ஸகாத்' கொடுக்க வேண்டும். இருபது தீனார் உம்மிடம் வருகின்ற வரை தங்கத்தில் உம்மீது 'ஸகாத்' கடமை இல்லை. உம்மிடம் இருபது தீனார் வந்து, அவற்றின் மீது ஓர் ஆண்டு சுற்றி வந்துவிட்டால் அவற்றில் அரை தீனார் 'ஸகாத்' கொடுக்க வேண்டும்.

18. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ﵁, நூல்: புகாரி 1362

அதைவிட அதிகமாக இருந்தால் அதற்கேற்ப அதிகமாக கொடுக்க வேண்டும்.[19]

عَنِ ابْنِ عُمَرَ وَعَائِشَةَ ﵄ أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ يَأْخُذُ مِنْ كُلِّ عِشْرِينَ دِينَارًا فَصَاعِدًا نِصْفَ دِينَارٍ وَمِنَ الْأَرْبَعِينَ دِينَارًا دِينَارًا رَوَاهُ ابْنُ مَاجَةَ بِرَقْمِ ١٧٨١

ஒவ்வொரு இருபது தங்க தீனார்களிலும் அரை தீனாரையும் நாற்பது தீனார்களில் ஒரு தீனாரையும் ('ஸகாத்'தாக) நபி ﷺ அவர்கள் வாங்குவார்கள்.[20]

**மூன்றாவது சட்டவிளக்கம்**

## தங்கம், வெள்ளியில் 'ஸகாத்' கடமையாகுவதற்குரிய நிபந்தனைகள்

தங்கம், வெள்ளியில் 'ஸகாத்' கடமையாகுவதற்குரிய நிபந்தனைகள் இரண்டு ஆகும்.

**1). தங்கம், வெள்ளி 'நிஸாப்' – குறிப்பிட்ட அளவை அடைந்திருக்க வேண்டும்.**

தங்கமாக இருந்தால் இருபது மிஸ்கால் அளவு அது இருக்க வேண்டும். இருபது மிஸ்கால் என்றால் இன்றைய கிராம் கணக்கின்படி என்பத்தி ஐந்து கிராம் ஆகும்.

عَنْ عَلِيٍّ ﵁ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ وَفِيهِ وَلَيْسَ عَلَيْكَ شَيْءٌ يَعْنِي فِي الذَّهَبِ حَتَّى يَكُونَ لَكَ عِشْرُونَ دِينَارًا فَإِذَا كَانَ لَكَ عِشْرُونَ دِينَارًا وَحَالَ عَلَيْهَا الْحَوْلُ فَفِيهَا نِصْفُ دِينَارٍ فَمَا زَادَ فَبِحِسَابِ ذٰلِكَ رَوَاهُ أَبُوْ دَاوُدُ بِرَقْمِ ١٣٤٢

19. அறிவிப்பாளர்: அலி ﵁, நூல்: அபூ தாவூத், எண்: 1342
20. அறிவிப்பாளர்: இப்னு உமர் ﵁, ஆயிஷா ﵂, நூல்: இப்னு மாஜா 1781

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: தங்கம் இருபது தீனார் உம்மிடம் வருகின்ற வரை தங்கத்தில் உம்மீது ‘ஸகாத்’ கடமை இல்லை. உம்மிடம் இருபது தீனார் வந்து, அவற்றின் மீது ஓர் ஆண்டு சுற்றி வந்துவிட்டால் அவற்றில் அரை தீனார் ‘ஸகாத்’ கொடுக்க வேண்டும். அதைவிட அதிகமாக இருந்தால் அதற்கேற்ப அதிகமாக கொடுக்க வேண்டும். வெள்ளி இரு நூறு திர்ஹம் அளவிற்கு இருந்தால் அதில் ‘ஸகாத்’ கடமையாகிவிடும்.[21]

**عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ وفيه وَلَيْسَ فِيمَا دُونَ خَمْسِ أَوَاقٍ صَدَقَةٌ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٣٥٥**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: ஐந்து ஊக்கியாவிற்கு குறைவாக வெள்ளி இருந்தால் ‘ஸகாத்’ கடமை இல்லை.[22]

ஒரு ஊக்கியா என்பது நாற்பது திர்ஹம் ஆகும். ஐந்து ஊக்கியா என்றால் இரு நூறு திர்ஹம் ஆகும்.

**وَفِي الرِّقَّةِ رُبْعُ الْعُشْرِ فَإِنْ لَمْ تَكُنْ إِلَّا تِسْعِينَ وَمِائَةً فَلَيْسَ فِيهَا شَيْءٌ إِلَّا أَنْ يَشَاءَ رَبُّهَا**

அபூ பக்ர் رضي الله عنه அவர்கள் ‘ஸகாத்’ குறித்து அனஸ் இப்னு மாலிக் رضي الله عنه அவர்களுக்கு எழுதிய கடிதத்தில் கூறுகிறார்கள்: வெள்ளியில் நாற்பதில் ஒன்று கொடுக்க வேண்டும். திர்ஹம் (வெள்ளி நாணயம்) நூற்றி தொண்ணூறு இருந்தால் அதில் ‘ஸகாத்’ கடமை இல்லை, அதன் உரிமையாளர் விரும்பினாலே தவிர.[23]

வெள்ளியில் ‘ஸகாத்’ கடமையாகுவதற்கு உள்ள நிஸாப் ஐந்து ஊக்கியா என்றும் தங்கத்தில் நிஸாப் இருபது மிஸ்கால் என்றும் அறிஞர்கள் அனைவரும் கூறுகிறார்கள்.[24]

21. அறிவிப்பாளர்: அலி رضي الله عنه, நூல்: அபூ தாவூது, எண்: 1346
22. அறிவிப்பாளர்: அபூ சயீது அல்குத்ரி رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 1355
23. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 1362
24. இமாம் நவவி رحمه الله அவர்கள் எழுதிய ஸஹீஹ் முஸ்லிம் உடைய விரிவுரை

**2). 'ஸகாத்' கடமையாகுவதற்குள்ள மற்ற நிபந்தனைகள் பூர்த்தியாகி இருக்கவேண்டும்.**

அவை,

1). அவர் முஸ்லிமாக இருக்க வேண்டும்.

2). சுதந்திரமானவராக இருக்க வேண்டும்.

3). அவருக்கு அந்த பொருள் முழுவதும் சொந்தமாக இருக்க வேண்டும்.

4). ஓர் ஆண்டு முழுமை அடைந்திருக்க வேண்டும்.

இந்த நான்கு நிபந்தனைகள் பற்றிய விளக்கம் முன்பு கூறப்பட்டுள்ளது.

**நான்காவது சட்டவிளக்கம்**

## தங்கள், வெள்ளி இவ்விரண்டில் ஒன்றை மற்றொன்றுடன் சேர்ப்பது

இது குறித்து அறிஞர்களிடம் பல கூற்றுகள் இருந்தாலும் இவ்விரண்டையும் ஒன்று சேர்க்கப்படாது என்பதுதான் மிக ஏற்றமான கூற்றாகும். அதாவது ஒருவரிடம் எண்பத்தி ஐந்து கிராமிற்கு குறைவாக தங்கமும் இரு நூறு திர்ஹமுக்கு குறைவாக வெள்ளியும் இருக்கிறது. ஆனால், இரண்டையும் விலை நிர்ணயித்து பார்க்கும்போது அது தங்கம் அல்லது வெள்ளிக்கு நிர்ணயிக்கப்பட்ட நிஸாபை எட்டி விடுகின்றது. இப்படி இருக்கும் பட்சத்தில் தங்கம் அல்லது வெள்ளியில் எதனுடைய நிஸாபை அது அடைகின்றதோ அதற்கேற்ப 'ஸகாத்' கொடுக்க வேண்டும் என்று சிலர் கூறுகிறார்கள். ஆனால், அறிஞர்களின் ஏற்றமான கூற்று கொடுக்க வேண்டாம் என்பதுதான். ஏனெனில், தங்கம், வெள்ளி இரண்டும் வெவ்வேறு இனமாகும். ஆகவே, இரண்டில் ஒன்றை மற்றொன்றுடன் சேர்க்கப்படாது. இது எப்படி என்றால், ஒருவரிடம் ஒட்டகங்கள் சில இருக்கின்றன. இன்னும் சில மாடுகளும் இருக்கின்றன. இரண்டையும் தனித்தனியாக பார்த்தால் 'ஸகாத்'துடைய நிஸாபை அவை எட்டியிருக்காது. ஆனால்,

இரண்டையும் விலை நிர்ணயித்துப் பார்த்தால் இரண்டில் ஒன்றுடைய நிஸாபை எட்டிவிட வாய்ப்பு இருக்கும். ஆனால், அவ்வாறு செய்து 'ஸகாத்' கொடுக்க வேண்டும் என்று யாரும் கூறுவதில்லை. இவ்வாறுதான் கோதுமை, பார்லி இரண்டில் ஒன்றை மற்றொன்றுடன் சேர்த்து மதிப்பிடப்படாது. ஒட்டகம், மாடு இரண்டிலும் நோக்கம் ஒன்றுதான். அதாவது வளர்ச்சியடைய செய்வது. கோதுமை, பார்லி இவ்விரண்டிலும் நோக்கம் ஒன்றுதான். அதாவது உணவுக்காக பயன்படுத்தப்படுவது. அவ்வாறு இருந்தும் அவற்றில் ஒன்றை மற்றொன்றுடன் சேர்க்கப்படாது. அவ்வாறுதான் தங்கம், வெள்ளி இவ்விரண்டின் நோக்கம் ஒன்றாக இருந்தாலும் இரண்டையும் தனித்தனியாகத்தான் கணக்கில் எடுக்கப்படும். ஒன்றை மற்றொன்றுடன் சேர்க்கப்படாது.

மேலும் நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

وَلَيْسَ فِيمَا دُونَ خَمْسِ أَوَاقٍ صَدَقَةٌ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٣٥٥

ஐந்து ஊக்கியாவிற்கு குறைவாக வெள்ளி இருந்தால் 'ஸகாத்' கடமை இல்லை.[25]

தங்கம், வெள்ளி இரண்டில் ஒன்றை மற்றொன்றுடன் சேர்க்க வேண்டும் என்று கூறினால் ஐந்து ஊக்கியாவை விட குறைவாக இருந்தாலும் அதை நிறைவு செய்கின்ற அளவிற்கு தங்கம் இருந்தால் 'ஸகாத்' கடமையாகி விடும் என்று கூற வேண்டியது வரும்.

ஆகவே, ஹதீஸில் எப்போது ஐந்து ஊக்கியாவிற்கு குறைவாக வெள்ளி இருந்தால் 'ஸகாத்' கடமை இல்லை என்று கூறப்பட்டு விட்டதால், ஐந்து ஊக்கியாவை பூர்த்தி செய்கின்ற அளவிற்கு தங்கம் இருந்தாலும் சரி, இல்லை என்றாலும் சரி அந்த வெள்ளியில் ஸகாத் இல்லை. அவ்வாறுதான் ஒருவரிடம் பத்து தீனாரும் நூறு திர்ஹமும் இருந்தாலும் 'ஸகாத்' கடமை இல்லை. தங்கம் வெள்ளி இரண்டையும் தனித்தனியாகத்தான் கவனிக்கப்படும். ஒன்றை மற்றொன்றுடன் சேர்த்து அல்ல.

25. அறிவிப்பாளர்: அபூ சயீது அல்குத்ரி ﷺ, நூல்: புகாரி, எண்: 1355

**ஐந்தாவது சட்டவிளக்கம்**

## ஆபரணங்களுடைய ‘ஸகாத்’

சேமிப்புக்காக அல்லது வாடகைக்கு விடுவதற்காக வைக்கப்பட்டுள்ள நகைகளுக்கும் ஆபரணங்களுக்கும் கண்டிப்பாக ‘ஸகாத்’ கொடுக்க வேண்டும் என்பதில் அறிஞர்கள் ஒருமித்த கருத்தில் இருக்கின்றனர்.

அவ்வாறே, ஹராமான ஆபரணங்கள், உதாரணமாக ஓர் ஆண் தங்க மோதிரத்தை வைத்திருந்தால், அல்லது பெண் ஒருத்தி உருவங்கள் வடிவில் ஆபரணங்களை வைத்திருந்தால் அல்லது உருவங்கள் செதுக்கப்பட்ட ஆபரணங்களை வைத்திருந்தால் கண்டிப்பாக அவற்றுக்கும் ‘ஸகாத்’ கொடுக்க வேண்டும்.

பயன்பாட்டுக்காக, அல்லது கூலி இல்லாமல் இரவல் கொடுப்பதற்காக வைக்கப்பட்டுள்ள நகைகளுக்கு ‘ஸகாத்’ உண்டா இல்லையா என்று அறிஞர்களுக்கு மத்தியில் கருத்து வேற்றுமை உள்ளது. அவற்றில் சரியான கூற்று இந்த வகை நகைகளுக்கும் ‘ஸகாத்’ கொடுக்க வேண்டும் என்பதே.

அதற்கான காரணமாவது:

1). தங்கம், வெள்ளியில் ‘ஸகாத்’ கடமை என்று கூறக்கூடிய ஆதாரங்கள் பொதுவாக உள்ளன. அவை எல்லா வகையான ஆபரணங்களையும் (–அன்றாடம் பயன்படுத்தப்படுபவை, எப்போதாவது பயன்படுத்தப்படுபவை, சேமிப்பாக வைக்கப்பட்டுள்ளவை, வியாபாரத்திற்காக வைக்கப்பட்டுள்ளவை என அனைத்தையும்) எடுத்துக்கொள்ளும்.

2). பின் வருகின்ற நபிமொழி இந்த கருத்தைத்தான் உறுதிப்படுத்துகின்றது.

عَنْ عَمْرِو بْنِ شُعَيْبٍ عَنْ أَبِيهِ عَنْ جَدِّهِ ﵁ أَنَّ امْرَأَةً أَتَتْ رَسُولَ اللهِ ﷺ وَمَعَهَا ابْنَةٌ لَهَا وَفِي يَدِ ابْنَتِهَا مَسَكَتَانِ غَلِيظَتَانِ مِنْ ذَهَبٍ فَقَالَ لَهَا

DARUL HUDA , CHENNAI - 1 | muftiomar@gmail.com | 044 25247866

أَتُعْطِينَ زَكَاةَ هَذَا قَالَتْ لَا قَالَ أَيَسُرُّكِ أَنْ يُسَوِّرَكِ اللهُ بِهِمَا يَوْمَ الْقِيَامَةِ سِوَارَيْنِ مِنْ نَارٍ قَالَ فَخَلَعَتْهُمَا فَأَلْقَتْهُمَا إِلَى النَّبِيِّ ﷺ وَقَالَتْ هُمَا لِلّٰهِ عَزَّ وَجَلَّ وَلِرَسُولِهِ رَوَاهُ ابو داود بِرَقْمِ ١٣٣٦ ورَوَاهُ النَّسَائِيُّ بِرَقْمِ ٢٤٣٤

ஒரு பெண்மணி தனது மகளுடன் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் வந்தார். அவருடைய மகளின் கரத்தில் நன்கு கனமுள்ள, இரண்டு தங்க வளையல்கள் இருந்தன. ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் அவரிடம் இதற்கு நீர் 'ஸகாத்' கொடுத்து வருகிறீரா என்று கேட்டார்கள். அவர் இல்லை என்று கூறினார். நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: "மறுமை நாளில் இதற்கு பகரமாக நரகத்தின் இரண்டு வளையல்களை அல்லாஹ் உமக்கு அணிவிப்பது மகிழ்ச்சி அளிக்குமா?" அறிவிப்பாளர் கூறுகிறார்: (இதை செவியுற்ற) அந்த பெண்மணி உடனே அந்த இரண்டு வளையல்களையும் கழட்டி நபி ﷺ அவர்களுக்கு முன் போட்டுவிட்டு, "இவை இரண்டும் (இப்போது) அல்லாஹ்விற்கும் அவனது தூதருக்கும் உரியன" என்று கூறினார்.[26]

இந்த நபிமொழி அணிகின்ற நகைகளுக்கும் கண்டிப்பாக 'ஸகாத்' கொடுக்க வேண்டும் என்பதை மிகத் தெளிவாக உறுதி செய்கின்றது.

3). எல்லா வகையான நகைகளுக்கும் 'ஸகாத்' கொடுக்க வேண்டும் என்ற கூற்றுதான் பேணுதலானதாகும். பொறுப்பிலிருந்து நீங்குவதற்கு இதுதான் மிகச் சரியான கூற்றாக இருக்கும்.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

دَعْ مَا يَرِيبُكَ إِلَى مَا لاَ يَرِيبُكَ

உமக்கு சந்தேகத்தை ஏற்படுத்தக்கூடியதை விட்டுவிட்டு உமக்கு சந்தேகத்தை ஏற்படுத்தாத ஒன்றிற்கு வந்துவிடு.[27]

---

26. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னு ஆஸ் ؓ, நூல்: அபூ தாவூத், எண்: 1336, நூல்: நசாயி, எண்: 2434

27. அறிவிப்பாளர்: ஹஸன் இப்னு அலி ؓ, நூல்: திர்மிதி எண்: 2518

**ஆறாவது சட்டவிளக்கம்**

## வியாபாரப் பொருள்களுடைய 'ஸகாத்'

عروض – உரூழ் என்பது عرض – அர்ழ் அல்லது அரழ் என்ற பதத்தின் பன்மையாகும். வியாபார நோக்கத்துடன் வைத்துள்ள எல்லா வஸ்துக்களையும் இது எடுத்துக்கொள்ளும்.

வியாபாரப் பொருள்களுக்கு அரபியில் உரூழ் என்று கூறப்பட்டதன் காரணமாவது அர்ழ் என்றால் தற்காலிகம், நிரந்தரமற்றது என்று பொருளாகும். வியாபாரத்திற்கு உள்ள பொருள்களும் ஒருவரிடம் நிரந்தரமாக இருக்காது. வியாபாரி அதை வாங்கி தன்னிடம் வைத்திருப்பதன் நோக்கமே அதை உடனே விற்று காசாக்க வேண்டும் என்பதே. ஆகையால்தான் வியாபாரப் பொருள்களுக்கு உரூழ் என்ற பெயர் வைக்கப்பட்டது.

இந்த வியாபாரப் பொருள்களிலும் 'ஸகாத்' உண்டு.

அல்லாஹ் கூறுகின்றான்:

وَفِي أَمْوَالِهِمْ حَقٌّ لِلسَّائِلِ وَالْمَحْرُومِ

அவர்களுடைய செல்வங்களில் யாசிப்பவருக்கும் இல்லாதவருக்கும் உரிமை உண்டு. (அல்குர்ஆன் 51 : 19)

இந்த வசனத்தில், "அவர்களுடைய செல்வங்களில்" என்று அல்லாஹ் பொதுவாக கூறி இருக்கின்றான். ஆகையால் முஸ்லிமிடம் இருக்கின்ற செல்வங்கள் அனைத்தும் இதில் அடங்கும். சேமித்து வைத்திருக்கின்ற செல்வம், வர்த்தகத்திற்காக உள்ள செல்வம் என அனைத்திலும் 'ஸகாத்' கடமை ஆகும்.

மேலும், அல்லாஹ் கூறுகின்றான்:

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا أَنْفِقُوا مِنْ طَيِّبَاتِ مَا كَسَبْتُمْ

நம்பிக்கையாளர்களே! நீங்கள் சம்பாதித்தவற்றில் நல்ல பொருள்களில் இருந்து தர்மம் செய்யுங்கள்! (அல்குர்ஆன் 2 : 267)

عَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللهُ عَنْهُمَا أَنَّ النَّبِيَّ ﷺ بَعَثَ مُعَاذًا رَضِيَ اللهُ عَنْهُ إِلَى الْيَمَنِ فَقَالَ ادْعُهُمْ إِلَى شَهَادَةِ أَنْ لَا إِلٰهَ إِلَّا اللهُ وَأَنِّي رَسُولُ اللهِ فَإِنْ هُمْ أَطَاعُوا لِذَلِكَ فَأَعْلِمْهُمْ أَنَّ اللهَ قَدْ افْتَرَضَ عَلَيْهِمْ خَمْسَ صَلَوَاتٍ فِي كُلِّ يَوْمٍ وَلَيْلَةٍ فَإِنْ هُمْ أَطَاعُوا لِذَلِكَ فَأَعْلِمْهُمْ أَنَّ اللهَ افْتَرَضَ عَلَيْهِمْ صَدَقَةً فِي أَمْوَالِهِمْ تُؤْخَذُ مِنْ أَغْنِيَائِهِمْ وَتُرَدُّ عَلَى فُقَرَائِهِمْ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٣٠٨

நபி ﷺ அவர்கள் முஆத் رضي الله عنه அவர்களை எமன் நாட்டுக்கு (ஆளுநராக) அனுப்பினார்கள். அப்போது அவர்களுக்கு கூறினார்கள்: "நிச்சயமாக வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் அறவே இல்லை. மேலும் நிச்சயமாக நான் அல்லாஹ்வுடைய தூதர் ஆவேன் என்று சாட்சி கூறுவதற்கு" அவர்களை அழையுங்கள்! அவர்கள் அதற்கு கீழ்ப்படிந்தால், "நிச்சயமாக அல்லாஹ் அவர்கள் மீது ஒவ்வொரு பகலிலும் இரவிலும் ஐந்து நேரத்தொழுகையை கட்டாயக் கடமையாக்கியுள்ளான்" என்று அவர்களுக்கு அறிவியுங்கள். அவர்கள் அதற்கும் கீழ்ப்படிந்தால், "நிச்சயமாக அல்லாஹ் அவர்கள் மீது அவர்களின் செல்வங்களில் 'ஸகாத்' தர்மத்தை கட்டாயக் கடமையாக்கியுள்ளான். அந்த தர்மம் அவர்களுடைய செல்வந்தர்களிடமிருந்து எடுக்கப்பட்டு அவர்களுடைய ஏழைகளுக்கு திரும்ப வழங்கப்படும்" என்று அவர்களுக்கு அறிவியுங்கள்![28]

**கருத்து:** இந்த நபிமொழியில், فِي أَمْوَالِهِمْ "அவர்களின் செல்வங்களில்" என்று வந்துள்ளது. ஆகவே, எல்லா வகையான செல்வங்களும் பொருள்களும் இந்த வார்த்தைக்குள் வந்துவிடும். வியாபாரத்திற்காக உள்ள செல்வமாக இருந்தாலும் சரி அல்லது சேமிப்புக்காக உள்ள

28. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 1308

செல்வமாக இருந்தாலும் சரி. இன்னும், வியாபாரப் பொருள்களும் செல்வங்கள்தான் என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை.

வியாபாரப் பொருள்களில் ‘ஸகாத்’ கடமையாகுவதற்குள்ள நிபந்தனைகள்

**1). அந்த பொருள்கள் நிஸாபை எட்டி இருக்க வேண்டும்.**

**2). அந்த பொருளை தனது முயற்சியால் சொந்தமாக்கி இருக்க வேண்டும்.**

உதாரணமாக, இவர் அதை விலைக்கு வாங்கி இருக்க வேண்டும். அல்லது பிறர் அன்பளிப்பாக கொடுக்க இவர் அதை ஏற்றுக்கொண்டிருக்க வேண்டும். ஆகவே, சொத்துரிமையின் அடிப்படையில் தனது எவ்வித தொடர்பும் இல்லாமல் கிடைக்கப்பெற்ற செல்வம் இதில் அடங்காது. உதாரணமாக, ஒருவருக்கு வாரிசுரிமையில் ஓர் இடம் கிடைக்கின்றது. அல்லது வேறு ஏதாவது பொருள்கள் கிடைக்கின்றன. இந்த பொருள்கள் வியாபாரப் பொருள்கள் என்ற சட்டத்தின் கீழ் வராது. மாறாக, இவை பின்னர் விற்கப்பட்டு அந்த கிரயம் ஓர் ஆண்டு இவருடைய கையில் இருந்தால்தான் ‘ஸகாத்’ கடமையாகும்.

**3). வியாபார எண்ணத்தில் அந்த பொருளை வைத்திருக்க வேண்டும்.**

இவை போக ‘ஸகாத்’ தொடர்பாக முன்னர் கூறப்பட்ட ஐந்து நிபந்தனைகளும் இதில் கவனிக்கப்படும். (பார்க்க பக்கம் 25)

ஆகவே, வியாபாரப் பொருள்கள் கைக்கு வந்ததிலிருந்து ஓர் ஆண்டு பூர்த்தி அடைந்துவிட்டால் தங்கம் அல்லது வெள்ளி நாணயங்களில் இரண்டில் ஒன்றைக்கொண்டு அதற்கு விலை நிர்ணயிக்கப்படும். அந்த விலை நிஸாப் -அளவுக்கு வந்துவிட்டால் அதிலிருந்து நாற்பதில் ஒன்றை (நூற்றில் இரண்டரை சதவீதத்தை) ‘ஸகாத்’தாக கொடுக்க வேண்டும். பொருள்கள் வாங்கும்போது உள்ள விலையை எடுத்துக்கொள்ளப்படாது. ஆண்டு பூர்த்தியாகும்போது அப்போது அந்த பொருள்களுக்கு என்ன விலை என்பதை நிர்ணயம்

செய்து அதிலிருந்துதான் ‘ஸகாத்’ கொடுக்க வேண்டும். ஏனெனில், வாங்கியதற்குப் பின்னர் பொருளின் விலை இறங்கவும் செய்யலாம். அல்லது ஏறவும் செய்யலாம். விலை குறையவும் செய்யலாம். அல்லது கூடவும் செய்யலாம்.

--------------------

*மூன்றாவது பாடம்*

## الباب الثالث في زكاة الخارج من الأرض

## பூமியில் விளையக்கூடியவற்றில் ‘ஸகாத்’

இதில் பல சட்டவிளக்கங்கள் உள்ளன

**முதலாவது சட்டவிளக்கம்**

பூமியில் விளையக்கூடிய விளைச்சல்கள் மீதும் ‘ஸகாத்’ இருக்கின்றது. அது எப்போது கடமையாகின்றது? அதன் ஆதாரம் என்ன? என்பதைப் பார்ப்போம்.

பூமியில் விளையக்கூடிய விளைச்சல்களில் அல்லாஹ் ‘ஸகாத்’தை கடமையாக்கி இருக்கின்றான்.

அல்லாஹ் கூறுகின்றான்:

يَاأَيُّهَا الَّذِينَ آمَنُوا أَنْفِقُوا مِنْ طَيِّبَاتِ مَا كَسَبْتُمْ
وَمِمَّا أَخْرَجْنَا لَكُمْ مِنَ الْأَرْضِ

நம்பிக்கையாளர்களே! நீங்கள் சம்பாதித்தவற்றில் நல்ல பொருள்களிலிருந்தும் பூமியில் நாம் உங்களுக்கு உற்பத்தி செய்து கொடுத்தவற்றிலிருந்தும் தர்மம் செய்யுங்கள்! (அல்குர்ஆன் 2 : 267)

பூமியில் விளையக்கூடிய தானியங்கள் நன்கு உலர்ந்து காய்ந்துவிடும் போது அவற்றில் ‘ஸகாத்’ கொடுக்க வேண்டும். அவ்வாறே பழங்கள்

அவற்றை உண்பதற்கு தகுந்த அளவு கனிந்துவிடும்போது அவற்றில் 'ஸகாத்' கொடுக்க வேண்டும். இவை ஓர் ஆண்டு பூர்த்தியாகி இருக்க வேண்டும் என்ற நிபந்தனை இல்லை.

அல்லாஹ் கூறுகின்றான்:

அதனுடைய கடமையை (–'ஸகாத்'தை) அதை அறுவடை செய்யும் நாளில் கொடுத்துவிடுங்கள்! (அல்குர்ஆன் 6 : 141)

அளந்து விற்கப்படுகின்ற, சேமித்து வைப்பதற்கு தகுந்த தானியங்கள் மற்றும் கனிகள் மீது மட்டும்தான் 'ஸகாத்' கடமையாகும். உதாரணமாக, கோதுமை, பார்லி, சோளம், அரிசி, பேரிச்சம்பழம், உலர்ந்த திராட்சைப் பழம் போன்றவை. ஆகவே, இவை அல்லாத மற்ற பழங்கள், காய்கறிகள் ஆகியவற்றில் 'ஸகாத்' கடமை இல்லை.

நபி ﷺ அவர்கள் விளைச்சல்களில் 'ஸகாத்' கடமை என்று கூறும்போது அதன் அளவாக "வஸ்க்" என்பதை குறிப்பிட்டதால், அந்த விளைச்சல்கள் அளந்து விற்கப்படுகின்ற பொருளாக இருக்க வேண்டும் என்ற நிபந்தனை ஏற்படுத்தப்பட்டது. சேமித்து வைக்கப்படுவதற்கு தகுதி உள்ளதாக இருந்தால்தான் அதில் 'ஸகாத்'தை கடமையாக்க முடியும் என்பதால் அந்த நிபந்தனையும் சேர்க்கப்பட்டது.

ஆகவே, எது அளந்து விற்கப்படவில்லையோ, அல்லது சேமித்து வைப்பதற்கு உகந்ததாக இல்லையோ அவற்றில் 'ஸகாத்' இல்லை.

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## 'ஸகாத்'தின் நிபந்தனைகள்

தானியங்கள், பழங்களில் 'ஸகாத்' கடமையாகுவதற்கு இரண்டு நிபந்தனைகள் உள்ளன.

1). அவை நிஸாபை எட்டி இருக்க வேண்டும். அதாவது, ஐந்து வஸக் அளவு இருக்க வேண்டும்.

عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِي ﷺ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ لَيْسَ فِيمَا دُونَ خَمْسِ ذَوْدٍ صَدَقَةٌ مِنَ الْإِبِلِ وَلَيْسَ فِيمَا دُونَ خَمْسِ أَوَاقٍ صَدَقَةٌ وَلَيْسَ فِيمَا دُونَ خَمْسَةِ أَوْسُقٍ صَدَقَةٌ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٣٥٥

ஒட்டகங்களில் ஐந்துக்கு குறைவாக இருந்தால் 'ஸகாத்' கடமை இல்லை. ஐந்து ஊக்கியாவிற்கு[29] குறைவாக வெள்ளி இருந்தால் 'ஸகாத்' கடமை இல்லை. ஐந்து வஸ்க்குகளுக்கு குறைவாக தானியம் இருந்தால் 'ஸகாத்' இல்லை.[30]

வஸக் என்றால் ஓர் ஒட்டகத்தால் சுமக்கப்படுகின்ற அளவாகும். அது நபி ﷺ அவர்களின் صاع - ஸாஃ என்ற அளவின்படி அறுபது ஸாஃவுகள் ஆகும். ஆகவே, ஐந்து வஸக் என்பது முன்னூறு ஸாஃவுகள் ஆகும். அதாவது ஒரு ஸாஃ என்பது இரண்டு கிலோ மற்றும் நாற்பது கிராம் ஆகும். ஆகவே, முன்னூறு ஸாஃவுகள் என்றால் ஆறு நூற்றி பன்னிரண்டு (612) கிலோ ஆகும்.

2). மேற்குறிப்பிட்ட அளவு தானியம் அல்லது பழம் அவற்றில் 'ஸகாத்' கடமையாகின்ற போது அவை அவருக்கு சொந்தமானதாக இருக்க வேண்டும்.

**மூன்றாவது சட்டவிளக்கம்**

## 'ஸகாத்'தின் அளவு என்ன?

தானியங்கள், பழங்கள் ஆகியவற்றை பயிரிட்டு, விளைச்சல் செய்யும்போது சிரமம் இன்றி நீர் பாய்ச்சப்பட்டு இருந்தால் அவற்றில் பத்தில் ஒன்றை கொடுக்க வேண்டும். வேர்கள் மூலம் பூமியில் உள்ள தண்ணீரை உறிஞ்சி வளருகின்ற தானியமாக இருந்தால் அல்லது மழை பொழிந்து நீர் பாய்ச்சப்பட்டிருந்தால், அல்லது ஊற்று நீர்களால் (வாய்க்கால் மற்றும் நீரோடைகள் போன்ற நீர் பாசனங்களால்) நீர்

29. ஒரு ஊக்கியா என்பது 28.3495 கிராம் ஆகும். 5 ஊக்கியா என்பது 141.7475 கிராம் ஆகும்.
30. அறிவிப்பாளர்: அபூ சயீது அல்குத்ரி ﷺ, நூல்: புகாரி, எண்: 1355

பாய்ச்சப்பட்டிருந்தால் அவற்றில் பத்தில் ஒன்று 'ஸகாத்'தாக கொடுக்க வேண்டும். மனிதன் தனது முயற்சியால் உதாரணமாக, கிணறுகளில் இருந்து நீர் இறைத்து அவற்றுக்கு நீர் புகட்டி இருந்தால் இருபதில் ஒன்றை 'ஸகாத்'தாக கொடுக்க வேண்டும்.

**عَنْ سَالِمِ بْنِ عَبْدِ اللهِ عَنْ أَبِيهِ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ فِيمَا سَقَتْ السَّمَاءُ وَالْأَنْهَارُ وَالْعُيُونُ أَوْ كَانَ بَعْلًا الْعُشْرُ وَفِيمَا سُقِيَ بِالسَّوَانِي أَوْ النَّضْحِ نِصْفُ الْعُشْرِ رَوَاهُ أَبُوْ دَاوُدُ بِرَقْمِ ١٣٦١**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: "வானம், நதிகள், ஊற்றுகள் நீர் புகட்டியதில் அல்லது வேர்களினால் நீர் உறிஞ்சியதில் பத்தில் ஒன்று 'ஸகாத்'தாக கொடுக்கப்பட வேண்டும். ஒட்டகத்தின் மூலம் நீர் பாய்ச்சியதில் இருபதில் ஒன்று 'ஸகாத்'தாக கொடுக்கப்பட வேண்டும்.[31]

**عَنْ عَبْدِ اللهِ بْنِ عُمَرَ ﵁ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ فِيمَا سَقَتْ السَّمَاءُ وَالْعُيُونُ أَوْ كَانَ عَثَرِيًّا الْعُشْرُ وَمَا سُقِيَ بِالنَّضْحِ نِصْفُ الْعُشْرِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٣٨٨**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: வானம் அல்லது ஊற்றுகள் நீர் பாய்ச்சியதில் அல்லது தானாக நீரை உறிஞ்சி வளர்ந்ததில் பத்தில் ஒன்று 'ஸகாத்'தாக கொடுக்கப்பட வேண்டும். நீர் இறைத்து நீர் பாய்ச்சப் பட்டதில் இருபதில் ஒன்று 'ஸகாத்'தாக கொடுக்கப்பட வேண்டும்.[32]

**நான்காவது சட்டவிளக்கம்**

## தேனுக்குரிய 'ஸகாத்'

ஒருவர் தேன் பண்ணை வைத்து தேன் உற்பத்தி செய்தால் அவ்வாறு

31. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு உமர் ﵄, நூல்: அபூ தாவூத், எண்: 1361
32. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு உமர் ﵄, நூல்: புகாரி, எண்: 1388

உற்பத்தி செய்து எடுக்கக்கூடிய தேனில் ‘ஸகாத்’ கொடுக்க வேண்டுமா இல்லையா?

தேனில் ‘ஸகாத்’ இல்லை என்று அதிகமான அறிஞர்கள் கூறுவதாக இப்னு அப்தில் பர் ﷺ இமாம் குறிப்பிடுகிறார்கள். இதுதான் தெளிவான கூற்றுமாகும்.

தேனில் ‘ஸகாத்’ உண்டு என்று உறுதிப்படுத்துகின்ற ஆதாரம் ஏதும் குர்ஆன், சுன்னாவில் இல்லை.

தேனில் ‘ஸகாத்’ உண்டு என்று கூறுகின்ற நபிமொழி பலவீனமானதாகும் என்று இமாம் ஷாஃபி ﷺ கூறுகிறார்கள்.

தேனில் ‘ஸகாத்’ கடமை என்று கூறுவதற்கு உறுதியான நபிமொழிகள் ஏதும் இல்லை என்று இமாம் இப்னுல் முன்திர் ﷺ கூறுகிறார்கள்.

ஆனால், ஒருவர் தேன் பண்ணை வைத்து தேன் உற்பத்தி செய்து அந்த தேனை விற்று வியாபாரம் செய்து வந்தால் அதை ஒரு வியாபாரப் பொருளாக எடுத்துக் கொள்ளப்படும். ஆண்டுக்கு ஒரு முறை தங்கம் அல்லது வெள்ளியின் நிஸாபை அது எட்டி இருந்தால் நாற்பதில் ஒன்று ‘ஸகாத்’தாக கொடுக்க வேண்டும். மற்ற வியாபாரப் பொருள்களில் ஒன்றாக இதையும் எடுத்துக் கொள்ளப்படும்.

**ஐந்தாவது சட்டவிளக்கம்**

## புதையலில் ‘ஸகாத்’

அறியாமைக் காலத்தில் நிராகரிப்பாளர்களால் பூமியில் புதைக்கப்பட்ட தங்கம், வெள்ளி புதையல்கள் மிகுந்த சிரமம், பொருள் செலவும் இல்லாமல் கண்டுபிடிக்கப்பட்டு எடுக்கப்பட்டால் அதை புதையல் என்று கூறப்படும். அது கண்டுபிடிக்கப்பட்டு எடுக்கப்பட்ட உடன் அதில் ஐந்தில் ஒன்றை ‘ஸகாத்’தாக கொடுக்க வேண்டும்.

عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ الْعَجْمَاءُ جُبَارٌ وَالْبِئْرُ جُبَارٌ وَالْمَعْدِنُ جُبَارٌ وَفِي الرِّكَازِ الْخُمُسُ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٤٠٣

கால்நடைகள் மன்னிக்கப்பட்டதாகும். கிணறு மன்னிக்கப்பட்டதாகும். சுரங்கம் மன்னிக்கப்பட்டதாகும். புதையலில் ஐந்தில் ஒன்று இருக்கின்றது.

**கருத்து:** கால்நடைகள் மன்னிக்கப்பட்டதாகும். அதாவது, ஒருவருடைய கால்நடை மேயும்போது யாரையும் முட்டி காயப்படுத்திவிட்டால் அதற்காக அதன் உரிமையாளர் குற்றம் பிடிக்கப்பட மாட்டார். அவரிடம் பழிதீர்க்கப்படாது. அதற்காக அவரிடம் பரிகாரமும் கேட்கப்படாது.

கிணறு மன்னிக்கப்பட்டதாகும். அதாவது, ஒருவர் பொதுவான இடத்தில் அல்லது தனக்கு சொந்தமான இடத்தில் ஒரு கிணறை தோண்டுகிறார். அந்த கிணற்றில் ஒருவர் விழுந்து, அவருக்கு ஏதும் ஆகிவிட்டால் அதற்காக கிணறை தோண்டியவர் குற்றம் பிடிக்கப்பட மாட்டார். அவர் நஷ்டஈடு கொடுக்க வேண்டிய அவசியமில்லை.

சுரங்கம் மன்னிக்கப்பட்டதாகும். அதாவது, ஒருவர் சுரங்கம் ஒன்றில் வேலை செய்வதற்காக ஒருவரை வேலைக்கு அமர்த்துகிறார். அதில் வேலை செய்யும்போது அந்த பணியாளர் இறந்துவிடுகிறார் அல்லது அவருக்கு ஏதும் ஆகிவிடுகின்றது என்றால், வேலைக்கு அமர்த்தியவர் மீது அது குற்றமாகாது. அவர் நஷ்டஈடு கொடுக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை.[33]

எது அதிகமான பொருள் செலவுடன் எடுக்கப்பட்டதோ அல்லது அதிகமான உழைப்பிற்கு பின்னர் எடுக்கப்பட்டதோ அது புதையல் என்ற சட்டத்தின் கீழ் வராது.

புதையல் குறைவாக இருந்தாலும் அல்லது அதிகமாக இருந்தாலும் அதில் ஐந்தில் ஒன்றை தர்மம் செய்ய வேண்டும். அதற்கு ஓர் ஆண்டு பூர்த்தியாக வேண்டும் என்ற நிபந்தனையும் இல்லை. அல்லது அந்த புதையல் நிஸாப் –அளவை எட்டி இருக்க வேண்டும் என்ற நிபந்தனையும் இல்லை.

இந்த புதையலில் வரக்கூடிய ஸகாத்தை முஸ்லிம்களுடைய பொது நன்மைகளில் பயன்படுத்தப்பட வேண்டும். இந்த புதையலில் தங்கம்,

33. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: புகாரி, எண்: 1403, 6401

வெள்ளி, அல்லது எது இருந்தாலும் சரி. இதுதான் அதனுடைய சட்டம். அந்த புதையலில் இருக்கின்ற அடையாளங்களை வைத்து ஜாஹிலிய்யா காலத்தில் புதைக்கப்பட்டது என்பதை அறிந்து கொள்ளலாம். உதாரணமாக, அந்த புதையலில் ஜாஹிலிய்யா காலத்தில் உள்ளவர்களின் பெயர்கள் எழுதப்பட்டுள்ளது. அல்லது அவர்களின் உருவங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. அல்லது இது போன்ற குஃப்ர் உடைய அடையாளங்கள் ஏதும் அதில் இருக்கின்றன.

கனிமங்களை பொறுத்தவரை அதாவது செடி, கொடி, தாவரம் அல்லாத எது பூமியிலிருந்து கிடைக்கப்பெறுகின்றதோ அது தார், பெட்ரோல் போன்ற திரவமாக இருந்தாலும் சரி, அல்லது இரும்பு, பித்தளை, தங்கம், வெள்ளி, பாதரசம் போன்ற திடப் பொருளாக இருந்தாலும் சரி, அதில் கண்டிப்பாக ‘ஸகாத்’ இருக்கின்றது. இதுதான் ஏகோபித்த கருத்தாகும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

يَاأَيُّهَا الَّذِينَ آمَنُوا أَنْفِقُوا مِنْ طَيِّبَاتِ مَا كَسَبْتُمْ
وَمِمَّا أَخْرَجْنَا لَكُمْ مِنَ الْأَرْضِ

நம்பிக்கையாளர்களே! நீங்கள் சம்பாதித்தவற்றில் நல்ல பொருள்களிலிருந்தும் பூமியில் நாம் உங்களுக்கு உற்பத்தி செய்து கொடுத்தவற்றிலிருந்தும் தர்மம் செய்யுங்கள்! (அல்குர்ஆன் 2 : 267)

**கருத்து:** “பூமியில் நாம் உங்களுக்கு உற்பத்தி செய்து கொடுத்தவற்றிலிருந்தும்” என்ற கூற்று பொதுவாக உள்ளது. ஆகவே, அது பூமியில் இருந்து மனிதன் பெறக்கூடிய அனைத்தையும் குறிக்கும்.

-----------------------

DARUL HUDA , CHENNAI - 1 | muftiomar@gmail.com | 044 25247866

*நான்காவது பாடம்*

## الباب الرابع في زكاة بهيمة الأنعام

## கால்நடைகளின் ‘ஸகாத்’

இதில் பல சட்டவிளக்கங்கள் உள்ளன.

கால்நடைகள் என்ற பதம் ஒட்டகம், மாடு, ஆடு ஆகியவற்றை குறிக்கின்றது. மாடு என்பதற்குள் எருமை மாடுகளும் அடங்கும். ஆடு என்ற பதம் நாட்டு ஆடு, செம்மறி ஆடு என எல்லா வகையான ஆடுகளையும் எடுத்துக்கொள்ளும்.

**முதல் சட்டவிளக்கம்**

## கால்நடைகளில் ‘ஸகாத்’ கடமை ஆகுவதற்குரிய நிபந்தனைகள்

**1). மார்க்கம் நிர்ணயித்த நிஸாப் –அளவை அவை எட்டி இருக்க வேண்டும்.**

ஒட்டகமாக இருந்தால் குறைந்தது ஐந்து ஒட்டகங்கள் இருக்க வேண்டும்.

மாடாக இருந்தால் குறைந்தது முப்பது மாடுகள் இருக்க வேண்டும்.

ஆடாக இருந்தால் குறைந்தது நாற்பது ஆடுகள் இருக்க வேண்டும்.

عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِي ﷺ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ لَيْسَ فِيمَا دُونَ خَمْسِ ذَوْدٍ صَدَقَةٌ مِنَ الْإِبِلِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٣٥٥

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: ஒட்டகங்களில் ஐந்துக்கு குறைவாக இருந்தால் ‘ஸகாத்’ கடமை இல்லை.[34]

**عَنْ يَحْيَ بْنِ الْحَكَمِ ﵀ أَنَّ مُعَاذًا ﵁ قَالَ بَعَثَنِي رَسُولُ اللهِ ﷺ أُصَدِّقُ أَهْلَ الْيَمَنِ وَأَمَرَنِي أَنْ آخُذَ مِنَ الْبَقَرِ مِنْ كُلِّ ثَلَاثِينَ تَبِيعًا وَمِنْ كُلِّ أَرْبَعِينَ مُسِنَّةً رَوَاهُ أَحْمَدُ بِرَقْمِ ٢١٠٧٠**

ஏமன் நாட்டு மக்களிடம் நான் ‘ஸகாத்’தை வசூலிக்கும்படி என்னை நபி ﷺ அவர்கள் அனுப்பினார்கள். மேலும், அவர்கள் எனக்கு கட்டளையிட்டார்கள்: “மாட்டில் ஒவ்வொரு முப்பது மாட்டிலும் ஒரு தபீஃஐ நான் ‘ஸகாத்’தாக வாங்க வேண்டும், ஒவ்வொரு நாற்பது மாட்டிலும் ஒரு முசின்னாவை ஐ நான் ‘ஸகாத்’தாக வாங்க வேண்டும் என்று.”[35]

تَبِيع – தபீஃ என்றால் ஓர் ஆண்டு முழுமையாக பூர்த்தியான காளை மாடாகும். مُسِنَّة – முசின்னா என்றால் இரண்டு ஆண்டுகள் பூர்த்தியான பசு மாடாகும்.

**وَفِي صَدَقَةِ الْغَنَمِ فِي سَائِمَتِهَا إِذَا كَانَتْ أَرْبَعِينَ إِلَى عِشْرِينَ وَمِائَةٍ شَاةٌ فَإِذَا زَادَتْ عَلَى عِشْرِينَ وَمِائَةٍ إِلَى مِائَتَيْنِ شَاتَانِ فَإِذَا زَادَتْ عَلَى مِائَتَيْنِ إِلَى ثَلَاثِ مِائَةٍ فَفِيهَا ثَلَاثُ شِيَاهٍ فَإِذَا زَادَتْ عَلَى ثَلَاثِ مِائَةٍ فَفِي كُلِّ مِائَةٍ شَاةٌ فَإِذَا كَانَتْ سَائِمَةُ الرَّجُلِ نَاقِصَةً مِنْ أَرْبَعِينَ شَاةً وَاحِدَةً فَلَيْسَ فِيهَا صَدَقَةٌ إِلَّا أَنْ يَشَاءَ رَبُّهَا رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٣٦٢**

34. அறிவிப்பாளர்: அபூ சயீது அல்குத்ரி ﵁, நூல்: புகாரி, எண்: 1355. இந்த நபிமொழியில் இடம்பெற்றுள்ள ذود என்பதன் பொருள் மூன்றிலிருந்து பத்து வரை உள்ள ஒட்டகக் கூட்டத்திற்கு கூறப்படும்.

35. அறிவிப்பாளர்: முஆத் ﵁, நூல்: அஹ்மது, எண்: 21070

அபூ பக்ர் ﵁ அவர்கள் 'ஸகாத்' குறித்து அனஸ் இப்னு மாலிக் ﵁ அவர்களுக்கு எழுதிய கடிதத்தில் கூறுகிறார்கள்: ஆடுகளுடைய 'ஸகாத்'தில் தானாக மேயக்கூடிய ஆடுகள் 40, நாற்பதிலிருந்து 120, நூற்றி இருபது வரை இருந்தால் அவற்றில் ஓர் ஆடு 'ஸகாத்'தாக கொடுக்க வேண்டும். 120 நூற்றி இருபதை தாண்டி 200 இரு நூறு வரை ஆடுகள் இருந்தால் இரண்டு ஆடுகள் 'ஸகாத்'தாக கொடுக்க வேண்டும். 200 இரு நூறை தாண்டி 300 முன்னூறு வரை இருந்தால் மூன்று ஆடுகள் 'ஸகாத்'தாக கொடுக்க வேண்டும். 300 முன்னூரை தாண்டிவிட்டால் ஒவ்வொரு நூறு ஆடுகளிலும் ஓர் ஆடு கொடுக்க வேண்டும். ஆகவே, ஒரு மனிதரின் மேயக்கூடிய ஆடுகள் நாற்பது ஆடுகளுக்கு ஓர் ஆடு குறைவாக இருந்தாலும் அதில் 'ஸகாத்' இல்லை, அதன் உரிமையாளர் விரும்பினாலே தவிர.[36]

**2). கால்நடைகள் அவற்றின் நிஸாபை எட்டிய பிறகு, அதன் உரிமையாளரிடம் ஓர் ஆண்டு முழுமையாக இருக்க வேண்டும்.**

**عَنْ عَائِشَةَ ﵄ قَالَتْ سَمِعْتُ رَسُولَ اللّٰهِ ﷺ يَقُولُ لَا زَكَاةَ فِي مَالٍ حَتَّى يَحُولَ عَلَيْهِ الْحَوْلُ رَوَاهُ ابْنُ مَاجَةَ بِرَقْمِ ١٧٨٢**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூற தான் செவியுற்றதாக ஆயிஷா ﵂ கூறுகிறார்கள்: ஒரு பொருள் மீது ஓர் ஆண்டு சுற்றிவருகின்ற வரை அதில் 'ஸகாத்' கடமை இல்லை.[37]

**3). கால்நடைகள் தாமாக மேயக்கூடியதாக இருக்க வேண்டும்.**

மேய்ச்சல் நிலங்களில் அல்லாஹ்வின் அனுமதி கொண்டு விளைந்த புற்பூண்டுகளை மேய்ந்து உணவு தேவைகளை பூர்த்தி செய்யக் கூடியதாக இருக்க வேண்டும். ஆண்டுகளில் பெரும்பகுதியாவது இவ்வாறு அவை மேய்ந்திருக்க வேண்டும்.

36. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ﵁, நூல்: புகாரி, எண்: 1362
37. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: இப்னு மாஜா, எண்: 1782

وَفِي صَدَقَةِ الْغَنَمِ فِي سَائِمَتِهَا إِذَا كَانَتْ أَرْبَعِينَ إِلَى عِشْرِينَ وَمِائَةٍ شَاةٌ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٣٦٢

அபூ பக்ர் ﵁ அவர்கள் 'ஸகாத்' குறித்து அனஸ் இப்னு மாலிக் ﵁ அவர்களுக்கு எழுதிய கடிதத்தில் கூறுகிறார்கள்: ஆடுகளுடைய 'ஸகாத்'தில் தானாக மேயக்கூடிய ஆடுகள் நாற்பதிலிருந்து நூற்றி இருபது வரை இருந்தால் அவற்றில் ஓர் ஆடு 'ஸகாத்'தாக கொடுக்க வேண்டும்.[38]

عَنْ بَهْزِ بْنِ حَكِيمٍ ﵁ عَنْ أَبِيهِ عَنْ جَدِّهِ مُعَاوِيَةَ بْنِ حَيْدَةَ قَالَ سَمِعْتُ نَبِيَّ اللهِ ﷺ يَقُولُ فِي كُلِّ إِبِلٍ سَائِمَةٍ فِي كُلِّ أَرْبَعِينَ ابْنَةُ لَبُونٍ رَوَاهُ أَحْمَدُ بِرَقْمِ ١٩١٨٦

நபி ﷺ அவர்கள் கூறியதை நான் செவியுற்றேன்: "மேயக்கூடிய ஒட்டகங்கள் ஒவ்வொரு நாற்பதிலும் ஒரு 'பின்த் லபூன்' 'ஸகாத்'தாக கொடுக்க வேண்டும்.[39]

ஒட்டகங்கள் ஓர் ஆண்டில் குறைவான நாட்கள் மேய்ந்தும் அதிகமான நாட்கள் தீவனங்கள் மூலமாக உணவு உண்பதாக இருந்தால் அவற்றில் 'ஸகாத்' கடமை இல்லை.

**4). அந்த கால்நடைகள் வேலை செய்யக்கூடியதாக இருக்கக்கூடாது.**

அதாவது, விவசாயத்திற்கு உழுதல், நீர் பாய்ச்சுதல், பொதி சுமத்தல் போன்ற தேவைகளுக்கு பயன்படுத்தப்படக்கூடியதாக இருக்கக் கூடாது. அவ்வாறு இருந்தால் அவை சுயதேவைகளுக்கு உள்ள பொருள்களில் கணக்கிடப்படும். அவற்றில் 'ஸகாத்' கடமை இல்லை. அந்த கால்நடைகள் வாடகைக்கு விடுவதற்காக வைக்கப்பட்டிருந்தால் வரக்கூடிய வாடகை வருமானத்தில் 'ஸகாத்' கடமை ஆகும். அந்த

---

38. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ﵁, நூல்: புகாரி, எண்: 1362
39. அறிவிப்பாளர்: முஆவியா இப்னு ஹைதா ﵁, நூல்: அஹ்மது, எண்: 19186

வருமானம் நிஸாபை எட்டி இருந்து, ஒரு வருடம் பூர்த்தியாகி விட்டால் அதில் 'ஸகாத்' கொடுக்க வேண்டும்.

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## 'ஸகாத்' உடைய அளவு

1). ஐந்து ஒட்டகங்கள் இருந்தால் ஓர் ஆண்டு பூர்த்தியான செம்மறி ஆடு, அல்லது இரண்டு ஆண்டுகள் பூர்த்தியான வெள்ளாடு கொடுக்க வேண்டும்.

பத்து ஒட்டகங்கள் இருந்தால் இரண்டு ஆடுகள் கொடுக்க வேண்டும்.

பதினைந்து ஒட்டகங்கள் இருந்தால் மூன்று ஆடுகள் கொடுக்க வேண்டும்.

இருபது ஒட்டகங்கள் இருந்தால் நான்கு ஆடுகள் கொடுக்க வேண்டும்.

ஒட்டகங்கள் இருபத்தி ஐந்திலிருந்து முப்பத்தி ஐந்து வரை இருந்தால் بنت مخاض - பின்த் மகாழ் ஓர் ஆண்டு பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகம் கொடுக்க வேண்டும். பெண் ஒட்டகம் இல்லையென்றால் இரண்டு ஆண்டுகள் பூர்த்தியான ஆண் ஒட்டகத்தை கொடுக்கலாம்.

ஒட்டகங்கள் முப்பத்தி ஆறிலிருந்து நாற்பத்தி ஐந்து வரை இருந்தால் بنت لبون– பின்த் லபூன் இரண்டு ஆண்டுகள் பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகத்தை கொடுக்க வேண்டும்.

ஒட்டகங்கள் நாற்பத்தி ஆறிலிருந்து அறுபது வரை இருந்தால் حقة ஹிக்கா –மூன்று ஆண்டுகள் நிறைவடைந்த ஒரு பெண் ஒட்டகத்தை கொடுக்க வேண்டும்.

ஒட்டகங்கள் அறுபத்தி ஒன்றிலிருந்து எழுபத்தி ஐந்து வரை இருந்தால் جذعة– ஜித்ஆ நான்கு ஆண்டுகள் பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகை கொடுக்க வேண்டும்.

ஒட்டகங்கள் எழுபத்தி ஆறிலிருந்து தொண்ணூறு வரை இருந்தால் (இரண்டு பின்த் லபூன்) இரண்டு ஆண்டுகள் பூர்த்தியான இரண்டு பெண் ஒட்டகங்கள் கொடுக்க வேண்டும்.

ஒட்டகங்கள் தொண்ணூற்றி ஒன்றிலிருந்து நூற்றி இருபது வரை இருந்தால் (இரண்டு ஹிக்கா) மூன்று ஆண்டுகள் நிறைவடைந்த இரண்டு பெண் ஒட்டகங்கள் கொடுக்க வேண்டும்.

நூற்றி இருபதுக்கும் மேலாக ஒட்டகங்கள் இருந்தால் ஒவ்வொரு நாற்பது ஒட்டகங்களுக்கும் (ஒரு பின்த் லபூன்) இரண்டு ஆண்டுகள் பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகம் கொடுக்க வேண்டும்.

ஒவ்வொரு ஐம்பது ஒட்டகங்களுக்கும் (ஒரு ஹிக்கா) மூன்று ஆண்டுகள் நிறைவான ஒரு பெண் ஒட்டகம் கொடுக்க வேண்டும்.

**ஒட்டகங்களின் 'ஸகாத்' விவர அட்டவணை**

| **எண்ணிக்கைகள்** | | **கொடுக்கவேண்டிய ஸகாத்** |
|---|---|---|
| இருந்து | வரை | |
| 5 | 9 | ஒரு ஆடு |
| 10 | 14 | இரண்டு ஆடுகள் |
| 15 | 19 | மூன்று ஆடுகள் |
| 20 | 24 | நான்கு ஆடுகள் |
| 25 | 35 | ஒரு பின்த் மகாழ் (ஓர் ஆண்டு நிறைவான ஒரு பெண் ஒட்டகம்) |
| 36 | 45 | ஒரு பின்த் லபூன் (இரண்டு ஆண்டுகள் பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகம்) |
| 46 | 60 | ஒரு ஹிக்கா (மூன்று ஆண்டுகள் நிறைவான ஒரு பெண் ஒட்டகம்) |
| 61 | 75 | ஒரு ஜித்ஆ (நான்கு ஆண்டுகள் பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகம்) |
| 76 | 90 | இரண்டு பின்த் லபூன் (இரண்டு ஆண்டுகள் பூர்த்தியான இரண்டு பெண் ஒட்டகங்கள்) |
| 91 | 120 | இரண்டு ஹிக்கா (மூன்று ஆண்டுகள் நிறைவான இரண்டு பெண் ஒட்டகங்கள்) |

120 க்கும் அதிகமாக ஒட்டகங்கள் இருந்தால் ஒவ்வொரு நாற்பது ஒட்டகங்களிலும் ஒரு பின்த் லபூன் (இரண்டு ஆண்டுகள் பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகம்) கொடுக்க வேண்டும்.

120 க்கும் அதிகமாக ஐம்பது ஒட்டகங்கள் இருந்தால் ஒவ்வொரு ஐம்பதுக்கும் ஒரு ஹிக்கா (மூன்று ஆண்டுகள் நிறைவான ஒரு பெண் ஒட்டகம்) கொடுக்க வேண்டும்.

அபூபக்ர் ﵁ அவர்கள் அனஸ் ﵁ அவர்களுக்கு ஸகாத் விவரங்களை பின்வருமாறு எழுதிக் கொடுத்தார்கள்.

**فِي أَرْبَعٍ وَعِشْرِينَ مِنَ الإِبِلِ، فَمَا دُونَهَا مِنَ الغَنَمِ مِنْ كُلِّ خَمْسٍ شَاةٌ إِذَا بَلَغَتْ خَمْسًا وَعِشْرِينَ إِلَى خَمْسٍ وَثَلاَثِينَ، فَفِيهَا بِنْتُ مَخَاضٍ أُنْثَى، فَإِذَا بَلَغَتْ سِتًّا وَثَلاَثِينَ إِلَى خَمْسٍ وَأَرْبَعِينَ فَفِيهَا بِنْتُ لَبُونٍ أُنْثَى، فَإِذَا بَلَغَتْ سِتًّا وَأَرْبَعِينَ إِلَى سِتِّينَ فَفِيهَا حِقَّةٌ طَرُوقَةُ الجَمَلِ، فَإِذَا بَلَغَتْ وَاحِدَةً وَسِتِّينَ إِلَى خَمْسٍ وَسَبْعِينَ، فَفِيهَا جَذَعَةٌ فَإِذَا بَلَغَتْ يَعْنِي سِتًّا وَسَبْعِينَ إِلَى تِسْعِينَ، فَفِيهَا بِنْتَا لَبُونٍ فَإِذَا بَلَغَتْ إِحْدَى وَتِسْعِينَ إِلَى عِشْرِينَ وَمِائَةٍ، فَفِيهَا حِقَّتَانِ طَرُوقَتَا الجَمَلِ، فَإِذَا زَادَتْ عَلَى عِشْرِينَ وَمِائَةٍ، فَفِي كُلِّ أَرْبَعِينَ بِنْتُ لَبُونٍ وَفِي كُلِّ خَمْسِينَ حِقَّةٌ، وَمَنْ لَمْ يَكُنْ مَعَهُ إِلَّا أَرْبَعٌ مِنَ الإِبِلِ، فَلَيْسَ فِيهَا صَدَقَةٌ إِلَّا أَنْ يَشَاءَ رَبُّهَا، فَإِذَا بَلَغَتْ خَمْسًا مِنَ الإِبِلِ، فَفِيهَا شَاةٌ**

ஒட்டகங்கள் இருபத்தி நான்கு அல்லது அதற்குக் குறைவாக இருந்தால் ஒவ்வொரு ஐந்து ஒட்டகத்திற்கும் ஓர் ஆடு ஸகாத் கொடுக்க வேண்டும். இருபத்தைந்து ஒட்டகம் முதல் முப்பத்தைந்து வரை ஒரு வயது பெண் ஒட்டகம், முப்பத்தாறு முதல் நாற்பத்தைந்துவரை, இரண்டு வயது பெண் ஒட்டகம், நாற்பத்தாறு முதல் அறுபது வரை மூன்று வயதுள்ள, பருவமான

பெண் ஒட்டகம், அறுபத்தொன்றிலிருந்து எழுபத்தைந்துவரை நான்கு வயது பெண் ஒட்டகம், எழுபத்தாறிலிருந்து தொண்ணூறு வரை இரண்டு வயதுள்ள இரண்டு பெண் ஒட்டகங்கள், தொண்ணூற்று ஒன்றிலிருந்து நூற்றியிருபதுவரை மூன்று வயதுள்ள, பருவமடைந்த இரண்டு பெண் ஒட்டகங்கள் ஸகாத்தாகும். நூற்றியிருபதுக்கும் அதிகமாகிவிட்டால் ஒவ்வொரு நாற்பது ஒட்டகங்களுக்கும் ஒரு பெண் ஒட்டகமும் ஒவ்வொரு ஐம்பதுக்கும் மூன்று வயது பெண் ஒட்டகம் ஒன்றும் ஸகாத்தாகும். யாரிடம் நான்கு ஒட்டகங்கள் மட்டும் இருக்கின்றனவோ அதில் ஸகாத் கடமை இல்லை. ஒட்டகத்தின் உரிமையாளர் நாடினாலே தவிர! ஒட்டகங்கள் ஐந்தாகிவிட்டால் அவற்றில் ஓர் ஆடு ஸகாத் கொடுக்க வேண்டும்.[40]

### 2). மாடுகளில் ‘ஸகாத்’ கொடுக்க வேண்டிய அளவு

மாடுகள் முப்பதிலிருந்து முப்பத்தி ஒன்பது வரை تبيع ஒரு தபீஃ (ஓர் ஆண்டு பூர்த்தியான காளை மாடு) கொடுக்க வேண்டும்.

மாடுகள் நாற்பதில் இருந்து ஐம்பத்தி ஒன்பது வரை இருந்தால் ஒரு مسنة முசின்னா (இரண்டு ஆண்டுகள் பூர்த்தியான ஒரு பசு மாடு) கொடுக்க வேண்டும்.

மாடுகள் அறுபதிலிருந்து அறுபத்தி ஒன்பது வரை இருந்தால் இரண்டு தபிஃ (ஓர் ஆண்டு பூர்த்தியான இரண்டு காளை மாடுகள்) கொடுக்க வேண்டும்.

மாடுகள் எழுபதை தாண்டிவிட்டால் ஒவ்வொரு முப்பது மாடுகளுக்கும் ஒரு தபீஃ (ஓர் ஆண்டு பூர்த்தியான காளை மாடு) கொடுக்க வேண்டும்.

ஒவ்வொரு நாற்பது மாடுகளுக்கும் ஒரு முசின்னா (இரண்டு ஆண்டுகள் பூர்த்தியான ஒரு பசு மாடு) கொடுக்க வேண்டும்.

மாடுகள் அறுபத்தி ஒன்பதை தாண்டி எவ்வளவு இருந்தாலும் இந்த கணக்கின்படிதான் ‘ஸகாத்’ கொடுக்க வேண்டும்.

---

40. அறிவிப்பாளர்: அனஸ் ﷺ, நூல்: புகாரி 1454

DARUL HUDA , CHENNAI - 1 | muftiomar@gmail.com | 044 25247866

عَنْ يَحْيَى بْنِ الْحَكَمِ ﵀ أَنَّ مُعَاذًا ﵁ قَالَ بَعَثَنِي رَسُولُ اللهِ ﷺ أُصَدِّقُ أَهْلَ الْيَمَنِ وَأَمَرَنِي أَنْ آخُذَ مِنَ الْبَقَرِ مِنْ كُلِّ ثَلَاثِينَ تَبِيعًا وَمِنْ كُلِّ أَرْبَعِينَ مُسِنَّةً رَوَاهُ أَحْمَدُ بِرَقْمِ ٢١٠٧٠

எமன் நாட்டு மக்களிடம் நான் 'ஸகாத்'தை வசூலிக்கும்படி என்னை நபி ﷺ அவர்கள் அனுப்பினார்கள். மேலும், அவர்கள் எனக்கு கட்டளையிட்டார்கள்: மாட்டில் ஒவ்வொரு முப்பது மாட்டிலும் ஒரு தபீஃ ஐ நான் 'ஸகாத்'தாக வாங்க வேண்டும், ஒவ்வொரு நாற்பது மாட்டிலும் ஒரு முசின்னாவை நான் 'ஸகாத்'தாக வாங்க வேண்டும் என்று.[41]

**மாடுகளின் 'ஸகாத்' விவர அட்டவணை**

| எண்ணிக்கைகள் | | கொடுக்கவேண்டிய ஸகாத் |
|---|---|---|
| முதல் | வரை | |
| 30 | 39 | ஒரு தபீஃ (ஓர் ஆண்டு பூர்த்தியான காளை மாடு) |
| 40 | 59 | ஒரு முசின்னா (இரண்டு ஆண்டுகள் பூர்த்தியான பசு மாடு) |
| 60 | 69 | இரண்டு தபீஃ (ஓர் ஆண்டு பூர்த்தியான இரண்டு காளை மாடுகள்) |
| 70 | 79 | ஒரு தபீஃ, ஒரு முசின்னா (ஓர் ஆண்டு பூர்த்தியான ஒரு காளை மாடு, இரண்டு ஆண்டுகள் பூர்த்தியான ஒரு பசு மாடு) |

இவ்வாறு மாடுகள் அதிகமாக அதிகமாக ஒவ்வொரு முப்பது மாடுகளுக்கும் ஒரு தபீஃ (ஓர் ஆண்டு பூர்த்தியான காளை மாடு) கொடுக்க வேண்டும்.

ஒவ்வொரு நாற்பது மாடுகளுக்கும் ஒரு முசின்னா (இரண்டு ஆண்டுகள் பூர்த்தியான ஒரு பசு மாடு) கொடுக்க வேண்டும்.

41. அறிவிப்பாளர்: முஆத் ﵁, நூல்: அஹ்மது, எண்: 21070

## ஆடுகளில் 'ஸகாத்'தின் நிஸாபும் கொடுக்க வேண்டிய அளவும்

ஆடுகள் முப்பத்தி ஒன்பது வரை இருந்தால் அவற்றில் ஸகாத் இல்லை. ஆடுகளின் எண்ணிக்கை நாற்பதை அடைந்து விட்டால் அவை நூற்றி இருபதாக ஆகும் வரை அவற்றில் ஓர் ஆடு கொடுக்க வேண்டும்.

ஆடுகள் நூற்றி இருபதிலிருந்து இரு நூறு வரை இரண்டு ஆடுகள் கொடுக்க வேண்டும்.

இரு நூற்றி ஒன்றிலிருந்து முன்னூறு வரை மூன்று ஆடுகள் கொடுக்க வேண்டும்.

முன்னூற்றி ஒன்றிலிருந்து ஒவ்வொரு நூறு ஆடுகளிலும் ஓர் ஆடு கொடுக்க வேண்டும்.

**ஆடுகளின் 'ஸகாத்' விவர அட்டவணை**

| எண்ணிக்கைகள் | | கொடுக்கவேண்டிய ஸகாத் |
|---|---|---|
| முதல் | வரை | |
| 40 | 120 | 1 ஆடு |
| 121 | 200 | 2 ஆடுகள் |
| 201 | 300 | 3 ஆடுகள் |
| 301 | 400 | 4 ஆடுகள் |
| 401 | 500 | 5 ஆடுகள் |
| 501 | 600 | 6 ஆடுகள் |
| 601 | 700 | 7 ஆடுகள் |
| 701 | 800 | 8 ஆடுகள் |
| 801 | 900 | 9 ஆடுகள் |
| 901 | 1000 | 10 ஆடுகள் |

وَفِي صَدَقَةِ الْغَنَمِ فِي سَائِمَتِهَا إِذَا كَانَتْ أَرْبَعِينَ إِلَى عِشْرِينَ وَمِائَةٍ

شَاةٌ فَإِذَا زَادَتْ عَلَى عِشْرِينَ وَمِائَةٍ إِلَى مِائَتَيْنِ شَاتَانِ فَإِذَا زَادَتْ عَلَى مِائَتَيْنِ إِلَى ثَلَاثِ مِائَةٍ فَفِيهَا ثَلَاثُ شِيَاهٍ فَإِذَا زَادَتْ عَلَى ثَلَاثِ مِائَةٍ فَفِي كُلِّ مِائَةٍ شَاةٌ فَإِذَا كَانَتْ سَائِمَةُ الرَّجُلِ نَاقِصَةً مِنْ أَرْبَعِينَ شَاةً وَاحِدَةً فَلَيْسَ فِيهَا صَدَقَةٌ إِلَّا أَنْ يَشَاءَ رَبُّهَا رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٣٦٢

அபூ பக்ர் ﵁ அவர்கள் ‘ஸகாத்’ குறித்து அனஸ் இப்னு மாலிக் ﵁ அவர்களுக்கு எழுதிய கடிதத்தில் கூறுகிறார்கள்: ஆடுகளுடைய ‘ஸகாத்’தில் தானாக மேயக்கூடிய ஆடுகள் நாற்பதிலிருந்து நூற்றி இருபது வரை இருந்தால் அவற்றில் ஓர் ஆடு ‘ஸகாத்’தாக கொடுக்க வேண்டும். நூற்றி இருபதை தாண்டி இரு நூறு வரை ஆடுகள் இருந்தால் இரண்டு ஆடுகள் ‘ஸகாத்’தாக கொடுக்க வேண்டும். இரு நூறை தாண்டி முன்னூறு வரை இருந்தால் மூன்று ஆடுகள் ‘ஸகாத்’தாக கொடுக்க வேண்டும். முன்னூரை தாண்டிவிட்டால் ஒவ்வொரு நூறு ஆடுகளிலும் ஓர் ஆடு கொடுக்க வேண்டும். ஆகவே, ஒரு மனிதரிடம் அவருக்கு சொந்தமாக மேயக்கூடிய ஆடுகள் நாற்பது ஆடுகளுக்கு ஓர் ஆடு குறைவாக இருந்தாலும் அதில் ‘ஸகாத்’ இல்லை, அதன் உரிமையாளர் விரும்பினாலே தவிர.[42]

**மூன்றாவது சட்டவிளக்கம்**

## ‘ஸகாத்’தில் கொடுக்கப்பட வேண்டிய பொருளின் தன்மை

அல்லாஹ்வின் மார்க்கமாகிய இஸ்லாம் மிக நீதமானதாகும். ஏழைகளின் உரிமைகளும் செல்வந்தர்களின் நலனும் நடுநிலையோடு கவனிக்கப்பட்டு, யார் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று மார்க்கம் வழிகாட்டி இருக்கின்றது. ஏழைகள் தங்கள் உரிமைகளை முழுமையாக பெற்றுக்கொள்வதற்கு மார்க்கம் அனுமதி வழங்கி இருக்கின்றது.

42. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ﵁, நூல்: புகாரி, எண்: 1362

அவ்வாறே, செல்வந்தர்களின் நலனும் பாதிக்கப்படாமல் இருக்க மார்க்கம் வழிகாட்டி இருக்கின்றது.

ஆகவே, ஸகாத்தாக கொடுக்கப்படக்கூடிய ஒன்று மிக விலை உயர்ந்ததாகவும் மிகத் தரமானதாகவும் இருக்க வேண்டும் என்று மார்க்கம் கடமையாக்கவில்லை. மட்டமானதை கொடுப்பதற்கும் மார்க்கம் அனுமதிக்கவில்லை. மாறாக, செல்வத்தில் நடுத்தரமானது எதுவோ அதையே 'ஸகாத்'தாக கொடுக்க வேண்டும் என்று மார்க்கம் வழிகாட்டியுள்ளது. 'ஸகாத்' வசூல் செய்ய செல்பவர் மார்க்கம் அனுமதித்துள்ளதை மட்டும் பெற வேண்டும். கடமையாக்கியதை விட அதிமாக, அல்லது ஸகாத் கொடுப்பவரின் செல்வத்தில் மிகச் சிறந்ததை கேட்கக் கூடாது. மார்க்கம் வழிகாட்டி இருப்பதை விட குறைவாகவும் பெறக்கூடாது. அல்லது மட்டமானதையும் வாங்கக் கூடாது. குறைந்ததை அல்லது மட்டமானதை வாங்குவது ஏழைகளின் உரிமைகளுக்கு நஷ்டம் விளைவிப்பதாகும். அதிகமாக அல்லது உயர்ந்ததை கேட்பது செல்வந்தர்களுக்கு சிரமத்தை ஏற்படுத்துவதாகும்.

நோயுற்ற பிராணிகள், குறையுடைய பிராணிகள், மிகவும் வயது முதிர்ந்த பிராணிகள் ஆகியவற்றை 'ஸகாத்'தில் எடுக்கக் கூடாது. மேலும், நன்கு உணவு உண்பதற்காக வளர்க்கப்படுகின்ற கொழுத்த பிராணி, தனது குட்டியை வளர்த்து வருகின்ற தாய் பிராணி, சினையாக உள்ள பிராணி, சினை ஏற்றுவதற்காக வளர்க்கப்படுகின்ற காளை ஆகிய பிராணிகளையும் ஸகாத்தில் எடுக்கக் கூடாது. இவற்றை எடுப்பது செல்வந்தர்களுக்கு சிரமம் கொடுப்பதாகும்.

நபி ﷺ அவர்கள் முஆத் رضي الله عنه அவர்களை ஏமன் நாட்டுக்கு ஆளுநராக அனுப்பியபோது அந்த மக்களுடன் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்று அறிவுரைகள் வழங்கினார்கள். அதில், 'ஸகாத்' உடைய அவசியத்தை கூறிய பின்னர் அந்த 'ஸகாத்'தை வாங்கும்போது எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள். அதில் வந்துள்ளதாவது:

فَإِيَّاكَ وَكَرَائِمَ أَمْوَالِهِمْ

முஆதே! அவர்களின் செல்வங்களில் சிறந்ததை நீ கேட்பதை விட்டும் நான் உன்னை எச்சரிக்கின்றேன்.[43]

உமர் ﷺ அவர்கள் தமது கவர்னர் ஸுஃப்யானுக்கு கூறினார்கள்: நீர் உமது மக்களுக்கு கூறுவாயாக! தனது குட்டியை வளர்த்து வருகின்ற பிராணியை, நன்கு கொழுத்த பிராணியை, அல்லது சினை ஏற்றுவதற்காக உள்ள கடா ஆட்டை நிச்சயமாக நாம் உங்களுக்கு விட்டு விடுகின்றோம். செம்மறி ஆட்டில் ஆறு மாதம் பூர்த்தியானதையும் வெள்ளாடுகளில் ஒரு வருடம் பூர்த்தியானதையும் (-உங்கள் செல்வத்துடைய ஸகாத்தில்) நாங்கள் எடுப்போம். இதுதான் எங்களுக்கும் உங்களுக்கும் இடையில் நடுத்தரமானதாகும்.

**நான்காவது சட்டவிளக்கம்**

## கால்நடைகளில் கூட்டாக உள்ளவை

கூட்டு கால்நடைகள் என்பது இரு வகையாக உள்ளன.

### 1). خلطة أعيان - குல்த்தது அஃயான் பொருள்களில் கூட்டாக இருப்பது.

அதாவது, பொருள்கள் பங்காளிகளுக்கு இடையில் கூட்டாக இருக்கும். பொருள்கள் அனைத்திலும் எவ்வித பாகுபாடு இல்லாமல் பங்காளிகளில் ஒவ்வொருவருக்கும் உரிமை இருக்கும். பங்காளிகளில் எவருக்கும் குறிப்பிட்ட ஒன்று சொந்தமாக இருக்காது. இவ்வகையான கூட்டு என்பது அனாந்தர (-வராஸத்) சொத்து கிடைக்கப் பெறும்போது ஏற்படலாம். அல்லது கூட்டாக பலர் சேர்ந்து ஒரு பொருளையோ அல்லது பல பொருளையோ வாங்கும்போது ஏற்படலாம்.

### 2). خلطة أوصاف - குல்த்தது அவ்ஸாஃப் தன்மையில் கூட்டாக இருப்பது.

அதாவது பங்காளிகளின் பங்குகள் தனித்தனியாகவும் அறியப் பட்டதாகவும் இருக்கும். ஆனால், அவை ஒன்று சேர்ந்து ஒரே ஓர் இடத்தில் இருக்கும்.

43. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﷺ, நூல்: புகாரி, எண்: 1401

உதாரணமாக, ஜைது என்ற ஒருவர் தன்னுடைய இருபது ஆடுகளை தனது நண்பராகிய உமரிடம் அவற்றை மேய்ப்பதற்காக கொடுக்கின்றார். உமர் அவற்றை தன்னுடைய இருபது ஆடுகளுடன் சேர்த்து மேய்க்கின்றார். இப்போது, உமரிடம் நாற்பது ஆடுகள் இருக்கின்றன.

இந்த இரண்டு வகையான கூட்டுப் பொருள்களும் ஒரு பொருளாகவே கவனிக்கப்படும். ஆகவே, மொத்த பொருள்கள் நிஸாப் – அளவை எட்டி இருந்து, இன்னும் அதன் உரிமையாளர்கள் 'ஸகாத்' கொடுப்பதற்குள்ளவர்களில் இருந்தால் கண்டிப்பாக அந்த பொருளில் 'ஸகாத்' கொடுக்க வேண்டும்.

பங்காளிகள் இருவரில் ஒருவர் காஃபிர் – நிராகரிப்பாளராக இருந்தால் 'ஸகாத்'தை கடமையாகாது. (முஸ்லிமுடைய பங்கு மட்டும் தனியாக 'ஸகாத்' உடைய நிஸாபை எட்டினால் மட்டும் அதில் 'ஸகாத்' கடமையாகும்.)

மேலும் கூட்டாக உள்ள பொருள்கள் அனைத்தும் மேயுமிடம், ஒதுங்குமிடம் என அனைத்திலும் ஒன்றாக இருப்பதுடன் காலையில் செல்லும்போதும், மாலையில் திரும்பும்போதும் ஒன்றாக இருக்க வேண்டும்.

இருவரின் பங்குகளின் கால்நடைகளை சினையாக்கக்கூடிய கடாவும் ஒன்றாகவும், அது இருவரின் பங்குகளுக்கும் பொதுவாகவும் இருக்க வேண்டும்.

இந்த நிபந்தனைகள் அனைத்தும் இருந்தால் அவை ஒரே பொருளாக கவனிக்கப்படும்.

**عَنْ ثُمَامَةَ ﷺ أَنَّ أَنَسًا ﷺ حَدَّثَهُ أَنَّ أَبَا بَكْرٍ ﷺ كَتَبَ لَهُ الَّتِي فَرَضَ رَسُولُ اللّٰهِ ﷺ وَلَا يُجْمَعُ بَيْنَ مُتَفَرِّقٍ وَلَا يُفَرَّقُ بَيْنَ مُجْتَمِعٍ خَشْيَةَ الصَّدَقَةِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٣٥٨ وفي رواية للبخاري بِرَقْمِ ١٣٥٩ وَمَا كَانَ مِنْ خَلِيطَيْنِ فَإِنَّهُمَا يَتَرَاجَعَانِ بَيْنَهُمَا بِالسَّوِيَّةِ**

நபி ﷺ அவர்கள் கடமையாக்கிய ‘ஸகாத்’ விவரங்களை அபூ பக்ர் ؓ அவர்கள் அனஸ் ؓ அவர்களுக்கு எழுதிக் கொடுத்தார்கள். அதில் உள்ளதாவது: “‘ஸகாத்’ கொடுப்பதை பயந்து, பிரிந்திருப்பதை ஒன்று சேர்க்கக் கூடாது; சேர்ந்திருப்பதை பிரிக்கக்கூடாது. மற்றொரு அறிவிப்பில் வந்துள்ளதாவது: இரு பங்காளிகளுக்கு எது சொந்தமாக இருக்கின்றதோ அதை அவர்கள் தங்களுக்கு மத்தியில் சமமாக திருப்பிக் கொள்வார்கள்.[44]

**عَنْ سُوَيْدِ بْنِ غَفَلَةَ ؓ قَالَ جَاءَنَا مُصَدِّقُ النَّبِيِّ ﷺ فَأَخَذْتُ بِيَدِهِ وَقَرَأْتُ فِي عَهْدِهِ لَا يُجْمَعُ بَيْنَ مُتَفَرِّقٍ وَلَا يُفَرَّقُ بَيْنَ مُجْتَمِعٍ خَشْيَةَ الصَّدَقَةِ رَوَاهُ ابْنُ مَاجَةَ بِرَقْمِ ١٧٩١**

ஸுவைத் இப்னு கஃபலா ؓ கூறுகிறார்: நபி ﷺ அவர்களுடைய முஸத்திக் (–‘ஸகாத்’ வசூலிப்பவர்) எங்களிடம் வந்தார். நான் அவருடைய கரத்தைப் பிடித்து அவருக்கு நபி அவர்கள் கட்டளையிட்ட விஷங்கள் எழுதப்பட்ட கடிதத்தில் படித்தேன். “‘ஸகாத்’ கொடுப்பதை பயந்து பிரிந்திருப்பதை ஒன்று சேர்க்கக்கூடாது. சேர்ந்திருப்பதை பிரிக்கக்கூடாது என்று அதில் எழுதப்பட்டு இருந்தது.

**கருத்து:** கூட்டாக இருப்பது ‘ஸகாத்’தை கட்டாயமாக்குவதிலும் அல்லது ‘ஸகாத்’தை இல்லாமல் ஆக்குவதிலும் தாக்கத்தை ஏற்படுத்தும். குறிப்பாக இது கால்நடைகளில் கூட்டாக இருப்பதற்குள்ள சட்டமாகும். மற்ற வியாபார பொருள்களில் கூட்டாக இருப்பதற்கு இந்த சட்டம் இல்லை.

மேற்கூறப்பட்ட சட்டத்தின் விளக்கம் மற்றும் உதாரணம்:

பிரிந்திருப்பதை ஒன்று சேர்க்கக்கூடாது என்ற சட்டத்திற்கு உதாரணம்: மூன்று நபர்கள், அவர்களில் ஒவ்வொருவருக்கும் நாற்பது ஆடுகள் சொந்தமாக இருக்கின்றன. இவை அனைத்தையும் சேர்த்தால் மொத்தம் நூற்றி இருபது ஆடுகள் ஆகும். இப்போது ஒவ்வொருவரின் ஆடுகளையும் தனித்தனியாக கவனித்தால் மூன்று ஆடுகள் ‘ஸகாத்’

44. அறிவிப்பாளர்: அனஸ் ؓ, நூல்: புகாரி, எண்: 1358, எண்: 2307

கொடுக்க வேண்டும். மூன்று நபர்களின் ஆடுகள் அனைத்தையும் ஒன்று சேர்த்தால் ஒரே ஓர் ஆடுதான் கொடுக்க வேண்டியது வரும். இவர்கள் தங்கள் ஆடுகளை தனித்தனியாக பராமரித்து வரும்போது, இவர்களுக்கு மத்தியில் எவ்வித கூட்டும் இல்லாமல் இருக்கும்போது 'ஸகாத்'துடைய அளவை குறைப்பதற்காக ஸகாத் வசூல் செய்பவர் வரும்போது பிரிந்திருக்கின்ற ஆடுகளை ஒன்று சேர்த்து காட்டுகின்றனர். இதனால் ஓர் ஆட்டை மட்டும் கொடுத்துவிட்டு தப்பித்துவிடலாம் என்று எண்ணுகின்றனர். பிறகு, அந்த ஓர் ஆட்டின் விலையை மூன்றாக பங்கிட்டு தங்களுக்குள் பிரித்துக்கொள்கின்றனர். இவ்வாறு செய்வது கூடாது. இதைப் பற்றித்தான் நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

لَا يُجْمَعُ بَيْنَ مُتَفَرِّقٍ

"பிரிந்திருப்பதை ஒன்று சேர்க்கக்கூடாது." என்பதற்கு உதாரணம்:

ஒருவரிடம் நாற்பது ஆடுகள் இருக்கின்றன. வசூல் செய்பவர் வருவதை அந்த மனிதர் அறிந்தவுடன் அவர் தனது ஆடுகளை இருபது இருபதாக பிரித்து இரண்டு இடங்களில் வைத்துவிடுகின்றார். இப்போது வசூலிப்பவர் வந்து பார்த்துவிட்டு நாற்பதை விட குறைவாக இருப்பதால் 'ஸகாத்' வாங்க முடியாமல் திரும்பிவிடுவார். ஸகாத் கொடுக்காமல் இருப்பதற்கு இப்படி தந்திரம் செய்வதை நபி ﷺ அவர்கள் தடுத்தார்கள்:

وَلَا يُفَرَّقُ بَيْنَ مُجْتَمِعٍ

"சேர்ந்திருப்பதை பிரிக்கக்கூடாது." என்பதற்கு உதாரணம்:

وَمَا كَانَ مِنْ خَلِيطَيْنِ فَإِنَّهُمَا يَتَرَاجَعَانِ بَيْنَهُمَا بِالسَّوِيَّةِ

இரு பங்காளிகளுக்கு எது சொந்தமாக இருக்கின்றதோ அதை அவர்கள் தங்களுக்கு மத்தியில் சமமாக திருப்பிக்கொள்வார்கள்.

இதற்கு அறிஞர் கத்தாபி ؒ அவர்கள் கூறுகின்ற விளக்கத்தை

ஹாஃபிழ் இப்னு ஹஜர் ﵀ தனது விரிவுரை நூலான 'ஃபத்ஹுல் பாரி'யில் பின்வருமாறு பதிவு செய்துள்ளார்கள்:

**قَالَ الْخَطَّابِيُّ ﵀ مَعْنَاهُ أَنْ يَكُونَ بَيْنَهُمَا أَرْبَعُونَ شَاةً مَثَلًا لِكُلِّ وَاحِدٍ مِنْهُمَا عِشْرُونَ قَدْ عَرَفَ كُلٌّ مِنْهُمَا عَيْنَ مَالِهِ فَيَأْخُذُ الْمُصَدِّقُ مِنْ أَحَدِهِمَا شَاةً فَيَرْجِعُ الْمَأْخُوذُ مِنْ مَالِهِ عَلَى خَلِيطِهِ بِقِيمَةِ نِصْفِ شَاةٍ ، وَهٰذِهِ تُسَمّٰى خُلْطَةَ الْجِوَارِ**

இரு பங்காளிகள் சேர்ந்து நாற்பது ஆடுகளை வளர்க்கின்றனர். அவற்றில் ஒவ்வொருவருக்கும் இருபது ஆடுகள் சொந்தமானவை. ஒவ்வொருவரின் இருபது ஆடுகளும் எது எது என்று தனித்தனியாக அறியப்பட்டவை. ஆனால், இருவரும் ஒன்று சேர்ந்து அந்த ஆடுகள் அனைத்தையும் மேய்க்கின்றனர், பராமரிக்கின்றனர். இப்போது வசூலிப்பவர் வரும்போது அந்த நாற்பது ஆடுகளில் ஓர் ஆட்டை 'ஸகாத்'தாக எடுப்பார். அந்த ஆடு இருவரில் ஒருவருக்கு சொந்தமாக இருக்கும். இப்போது அந்த ஆட்டின் சொந்தக்காரர் அந்த ஆட்டுக்கு ஒரு விலையை நிர்ணயித்து விலையின் பாதியை தனது பங்காளியிடம் வாங்கிக்கொள்வார். இத்தகைய கூட்டுக்கு خلطة الجوار குல்த்ததுல் ஜிவார் இணைந்திருக்கின்ற கூட்டு என்று கூறப்படும்.

---------------

ஐந்தாவது பாடம்

# الباب الخامس في زكاة الفطر

# ‘ஸகாத்’துல் ஃபித்ர் – ஃபித்ரா

ஸகாத்துல் ஃபித்ர், இதை ஸதக்கத்துல் ஃபித்ர் என்றும் கூறப்படும்.

ரமழான் மாதம் நோன்பு நோற்று ஷவ்வால் முதல் பிறை பெருநாளுக்கு முன்பாக கொடுக்க வேண்டிய தர்மத்திற்கு ஸதக்கத்துல் ஃபித்ர் அல்லது ஸகாத்துல் ஃபித்ர் என்று கூறப்படும். இதை நமது தமிழ் வழக்கில் "ஃபித்ரா" என்று கூறப்படுகின்றது.

"பிஃத்ர்" என்றால் நோன்பை முடித்தல் என்று பொருள் ஆகும். ரமழான் மாத நோன்பை முடிக்கின்றோம் என்ற அடிப்படையில் இது கொடுக்கப்படுவதால் இதற்கு ஸகாத்துல் ஃபித்ர், ஸதக்கத்துல் ஃபித்ர் என்று கூறப்படுகின்றது. இதற்கும் பொருளுக்கும் சம்பந்தம் இல்லை. இது ஒவ்வொருவரின் ذمة திம்மா பொறுப்போடு சம்பந்தப்பட்டதாகும். இது ஆன்மாவையும் உடலையும் சுத்தப்படுத்துவதற்காக கொடுக்கப்படக்கூடிய தர்மம் ஆகும்.

இந்த பாடத்தில் பல சட்டவிளக்கங்கள் உள்ளன.

**முதல் சட்டவிளக்கம்**

## ஃபித்ரா உடைய சட்டம் மற்றும் அதன் ஆதாரம்

ஒவ்வொரு முஸ்லிம் மீதும் – ஃபித்ரா கொடுப்பது வாஜிப் – கட்டாயம் ஆகும்.

**عَنِ ابْنِ عُمَرَ ﷺ قَالَ فَرَضَ رَسُولُ اللهِ ﷺ زَكَاةَ الْفِطْرِ صَاعًا مِنْ تَمْرٍ أَوْ صَاعًا مِنْ شَعِيرٍ عَلَى الْعَبْدِ وَالْحُرِّ وَالذَّكَرِ وَالْأُنْثَى وَالصَّغِيرِ وَالْكَبِيرِ مِنَ الْمُسْلِمِينَ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٤٠٧**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் ஸகாத்துல் ஃபித்ரை ஒரு ஸாஃ பேரித்தம் பழம், அல்லது ஒரு ஸாஃ பார்லி கோதுமை என்று அடிமை, சுதந்திரமானவர், ஆண், பெண், சிறுவர், பெரியவர் என எல்லா முஸ்லிம்கள் மீதும் கடமையாக்கினார்கள்.[45]

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## ஃபித்ரா நிபந்தனைகள் மற்றும் ஃபித்ரா கொடுப்பது கடமையானவர்கள்

ஃபித்ரா கொடுப்பது பெரியவர், சிறியவர், ஆண், பெண், சுதந்திரமானவர், அடிமை என எல்லா முஸ்லிம்கள் மீதும் கடமையாகும். இதற்கு மேற்கூறப்பட்ட நபிமொழிதான் ஆதாரமாகும்.

நான்கு மாதங்கள் பூர்த்தியான கருவில் உள்ள குழந்தைக்காகவும் ஃபித்ரா கொடுப்பது முஸ்தஹப்பாகும். நமது ஸலஃப் - சான்றோர் கருவில் உள்ள குழந்தைக்காகவும் ஃபித்ரா கொடுக்கும் வழக்கமுள்ளவர்களாக இருந்தனர்.

உஸ்மான் இப்னு அஃப்பான் ؓ அவர்கள் மற்றும் பல நபித்தோழர்கள் இவ்வாறு கொடுத்து வந்ததாக அறிவிப்புகள் வந்துள்ளன.

ஒவ்வொருவரும் தன் சார்பாகவும் யாரை பராமரிப்பது தன்மீது கடமையோ அவர்கள் சார்பாகவும் ஃபித்ரா கொடுக்க வேண்டும். உதாரணமாக, மனைவி, அடிமை, நெருக்கமான உறவினர்கள் போன்று. அடிமைக்காக அவருடைய எஜமானர் கொடுக்க வேண்டும்.

45. அறிவிப்பாளர்: இப்னு உமர் ؓ, நூல்: புகாரி, எண்: 1407

عَنْ عِرَاكِ بْنِ مَالِكٍ ﵀ قَالَ سَمِعْتُ أَبَا هُرَيْرَةَ ﵁ يُحَدِّثُ عَنْ رَسُولِ اللَّهِ ﷺ قَالَ لَيْسَ فِي الْعَبْدِ صَدَقَةٌ إِلَّا صَدَقَةُ الْفِطْرِ رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٦٣٣

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடமிருந்து அபூ ஹுரைரா ﵁ அவர்கள் ஹதீஸ் அறிவிப்பதை நான் செவியுற்றேன். ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: "ஃபித்ரா தர்மத்தைத் தவிர அடிமையில் வேறு எவ்விதமான தர்மமும் இல்லை."[46]

**கருத்து:** ஒருவரிடம் எத்தனை அடிமைகள் இருந்தாலும் அந்த அடிமைகளை தான் உரிமையாக்கி வைத்திருப்பதற்காக அவர் 'ஸகாத்' அல்லது ஸதகா கொடுக்க வேண்டிய கட்டாயமில்லை. ஆனால், ஃபித்ரா மட்டும் அந்த அடிமைகளுக்காக அவர்களின் உரிமையாளர் நிறைவேற்ற வேண்டும். ஒருவரிடம் எத்தனை அடிமைகள் இருக்கின்றார்களோ அத்தனை அடிமைகளுக்கும் அவர்களுடைய எஜமானர்தான் ஃபித்ரா கொடுக்க வேண்டும்.

யாரிடம் பெருநாள் உடைய பகலிலும் மற்றும் அதை தொடர்ந்து வருகின்ற இரவிலும் தனக்கும் தன்னை சார்ந்துள்ள தனது குடும்பத்தினருக்கும் தேவையான உணவு மற்றும் அவசிய தேவைகளுக்கு அதிகமாக ஃபித்ரா கொடுக்கின்ற அளவிற்கு தானியம் (அல்லது அதன் மதிப்புக்கு நாணயம்) இருக்கின்றதோ அவர் மீது ஃபித்ரா கடமையாகும்.

ஆக, ஃபித்ரா கடமையாகுவதற்கு இரண்டு நிபந்தனைகள் இருக்கின்றன.

1). முஸ்லிமாக இருக்க வேண்டும். ஆகவே, காஃபிர் – நிராகரிப்பாளர் மீது ஃபித்ரா கடமை ஆகாது.

2). பெருநாள் உடைய பகலிலும் மற்றும் அதை தொடர்ந்து வருகின்ற இரவிலும் தனக்கும் தன்னை சார்ந்துள்ள தனது குடும்பத்தினருக்கும் தேவையான உணவு மற்றும் அவசிய தேவைகளுக்கு அதிகமாக செல்வம் இருக்க வேண்டும்.

46. அறிவிப்பாளர்: இராக் இப்னு மாலிக் ﵀, நூல்: முஸ்லிம், எண்: 1633

**மூன்றாவது சட்டவிளக்கம்**

## ஃபித்ரா கடமையாக்கப்பட்டதின் தத்துவம்

மார்க்கத்தில் ஃபித்ரா கடமையாக்கப்பட்டதில் பல தத்துவங்கள் உள்ளன. அவை பின்வருமாறு:

1). நோன்பாளி நோன்பு நோற்றிருக்கும் போது அவரிடமிருந்து ஏதும் வீணான செயல்கள், பாவமான பேச்சுகள் நிகழ்ந்திருந்தால் அவற்றிலிருந்து அந்த நோன்பாளியை இந்த ஃபித்ரா பரிசுத்தப்படுத்துகின்றது.

2). பெருநாள் அன்று பிறரிடம் கையேந்தி நிற்காமல் இருக்கின்ற சூழ்நிலையை ஏழைகளுக்கும் வறியவர்களுக்கும் இந்த ஃபித்ரா ஏற்படுத்துகின்றது.

3). அவர்களையும் அன்று நிறைவுள்ளவர்களாக ஆக்கி அவர்களுக்குள் மகிழ்ச்சியை கொண்டுவருகின்றது இந்த ஃபித்ரா. இதன் மூலம் எல்லா தரப்பு மக்களுக்கும் மகிழ்ச்சிகள் நிறைந்த ஒரு நாளாக பெருநாள் ஆகிவிடுகின்றது.

عَنِ ابْنِ عَبَّاسٍ ﵁ قَالَ فَرَضَ رَسُولُ اللهِ ﷺ زَكَاةَ الْفِطْرِ طُهْرَةً لِلصَّائِمِ مِنَ اللَّغْوِ وَالرَّفَثِ وَطُعْمَةً لِلْمَسَاكِينِ رَوَاهُ أَبُوْ دَاوُدُ بِرَقْمِ ١٣٧١

வீணான சொல், செயல்களிலிருந்தும் பாவமான செயல்களிலிருந்தும் நோன்பாளியை சுத்தப்படுத்தக்கூடியதாகவும் ஏழைகளுக்கு உணவாகவும் (இருப்பதற்காக) ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் ஃபித்ராவை கடமையாக்கினார்கள்.[47]

4). ரமழான் மாதத்தில் பகலில் நோன்பு நோற்பதற்கும் இரவில் வணங்குவதற்கும் இன்னும் முடிந்தளவு பல நல்லமல்கள் செய்வதற்கும் அல்லாஹ் தனக்கு அருள் புரிந்ததற்காக இந்த ஃபித்ராவை ஏழைகளுக்கு கொடுப்பதன் மூலம் அல்லாஹ்விற்கு நன்றி செலுத்தப்படுகின்றது.

47. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵁, நூல்: அபூ தாவூத், எண்: 1371

**நான்காவது சட்டவிளக்கம்**

## ஃபித்ராவின் அளவு என்ன? ஃபித்ராவில் எதை கொடுப்பது?

தனது ஊரில் பொதுவாக எது சாப்பிடப்படுகின்றதோ அதைத்தான் ஃபித்ராவில் கொடுக்க வேண்டும். கோதுமை, பார்லி கோதுமை, பேரித்தம் பழம், திராட்சைப் பழம், அரிசி, சோளம், பாலாடை இன்னும் இவை போன்ற உணவுகளில் இருந்து ஒரு ஸாஃ கொடுக்க வேண்டும்.

عَنِ ابْنِ عُمَرَ رضي الله عنهما قَالَ فَرَضَ رَسُولُ اللهِ ﷺ زَكَاةَ الْفِطْرِ صَاعًا مِنْ تَمْرٍ أَوْ صَاعًا مِنْ شَعِيرٍ عَلَى الْعَبْدِ وَالْحُرِّ وَالذَّكَرِ وَالْأُنْثَى وَالصَّغِيرِ وَالْكَبِيرِ مِنَ الْمُسْلِمِينَ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٤٠٧

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் ஒரு ஸாஃ[48] பேரித்தம் பழம், அல்லது ஒரு ஸாஃ பார்லி கோதுமை (-வாற்கோதுமை)யை ஃபித்ராவாக கொடுப்பதை அடிமை, சுதந்திரமானவர், ஆண், பெண், சிறுவர், பெரியவர் என எல்லா முஸ்லிம்கள் மீதும் கடமையாக்கினார்கள்.[49]

பல நபர்கள் தங்கள் ஃபித்ராவை ஒரே ஒரு நபருக்கு கொடுக்கலாம். ஒரே ஒரு நபர் தனது ஃபித்ராவை பல நபர்களுக்கும் பிரித்துக் கொடுக்கலாம்.

உணவு தானியங்களுக்கு பதிலாக கிரயத்தை ஃபித்ராவில் கொடுப்பது கூடாது. அவ்வாறு கொடுப்பது நபி ﷺ அவர்கள் ஏவிய கட்டளைக்கும் நபித்தோழர்களின் செயலுக்கும் மாற்றமானதாகும்.

நபித்தோழர்கள் தங்கள் ஃபித்ராவை உணவு தானியங்களில் இருந்து ஒரு ஸாஃ அளவு கொடுப்பார்கள். அதன் கிரயத்தை அல்ல.

48. ஒரு ஸாவு: இன்றைய காலத்தில் சுமார் மூன்று கிலோ அளவாகும். (ஃபத்வா லஜ்னா தாயிமா, ஃபத்வா இப்னு பாஸ்)

49. அறிவிப்பாளர்: இப்னு உமர் رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 1407

ஃபித்ரா என்பது உணவு தானியங்களில் இருந்து கொடுக்கப்பட வேண்டும் என்று அல்லாஹ் கடமையாக்கிய ஒரு வணக்கமாகும். ஆகவே, உணவு தானியம் அல்லாததை ஃபித்ராவில் கொடுப்பது கூடாது. அவ்வாறு கொடுத்தால் அது ஃபித்ராவாக நிறைவேறாது.

**ஐந்தாவது சட்டவிளக்கம்**

## ஃபித்ரா எப்போது கடமையாகிறது? அதை எப்போது கொடுக்க வேண்டும்?

பெருநாள் இரவுக்கு முன் சூரியன் மறைந்த நேரத்திலிருந்து ஃபித்ரா கடமையாகின்றது. ஏனெனில், அப்போதுதான் அடியான் ரமழான் மாத நோன்பை முடிக்கின்றான்.

ஃபித்ராவை நிறைவேற்ற இரண்டு நேரங்கள் உள்ளன.

1). நிறைவேற்றுவதற்கு சிறப்பான நேரம்.

2). அனுமதிக்கப்பட்ட ஆகுமான நேரம்.

1). சிறப்பான நேரம் எதுவென்றால், பெருநாள் அன்று ஃபஜ்ருடைய நேரம் ஆரம்பமானதிலிருந்து பெருநாள் தொழுகையை நிறைவேற்றுவதற்கு சிறிது நேரத்திற்கு முன்னர் வரை ஆகும்.

**عَنِ ابْنِ عُمَرَ ﵄ أَنَّ النَّبِيَّ ﷺ أَمَرَ بِزَكَاةِ الْفِطْرِ قَبْلَ خُرُوجِ النَّاسِ إِلَى الصَّلَاةِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١٤١٣**

நபி ﷺ அவர்கள் மக்கள் தொழுகைக்கு புறப்படுவதற்கு முன்னர் ஃபித்ராவை கொடுக்க வேண்டும் என்று கட்டளையிட்டார்கள்.[50]

2). அனுமதிக்கப்பட்ட, ஆகுமான நேரம் எதுவென்றால், பெருநாள் வருவதற்கு ஒரு நாள் அல்லது இரு நாள்களுக்கு முன்பாக ஃபித்ராவை கொடுப்பதாகும்.

50. அறிவிப்பாளர்: இப்னு உமர் ﵁, நூல்: புகாரி எண்: 1413

பெருநாள் தொழுகைக்கு முன்பாக ஃபித்ராவை கொடுத்துவிட வேண்டும். அதை விட்டும் பிற்படுத்துவது கூடாது. அப்படி ஒருவர் பிற்படுத்தி கொடுத்தால் அது ஒரு பொதுவான தர்மமாகத்தான் இருக்கும். ஃபித்ராவாக ஆகாது.

**عَنِ ابْنِ عَبَّاسٍ ﵄ قَالَ فَرَضَ رَسُولُ اللهِ ﷺ زَكَاةَ الْفِطْرِ طُهْرَةً لِلصَّائِمِ مِنِ اللَّغْوِ وَالرَّفَثِ وَطُعْمَةً لِلْمَسَاكِينِ مَنْ أَدَّاهَا قَبْلَ الصَّلَاةِ فَهِيَ زَكَاةٌ مَقْبُولَةٌ وَمَنْ أَدَّاهَا بَعْدَ الصَّلَاةِ فَهِيَ صَدَقَةٌ مِنَ الصَّدَقَاتِ رَوَاهُ أَبُوْ دَاوُدُ بِرَقْمِ ١٣٧١**

வீணான சொல், செயல்களிலிருந்தும் பாவமான காரியங்களிலிருந்தும் நோன்பாளியை சுத்தப்படுத்துவதற்காகவும் ஏழைகளுக்கு உணவாக இருப்பதற்காகவும் அல்லாஹ்வுடைய தூதர் ﷺ ஃபித்ராவை கடமையாக்கினார்கள். யார் அதை பெருநாள் தொழுகைக்கு முன்பாக கொடுத்து விடுவார்களோ அது ஏற்றுக்கொள்ளப்பட்ட பித்ராவாக இருக்கும். யார் பெருநாள் தொழுகை முடிந்தவுடன் ஃபித்ராவை கொடுப்பார்களோ அது (ஏனைய உபரியான) தர்மங்களில் ஒரு தர்மமாக இருக்கும்.[51]

---

51. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵄, நூல்: அபூ தாவூத், எண்: 1371

*ஆறாவது பாடம்*

# باب السادس في أهل الزكاة
# ‘ஸகாத்’திற்கு உரியவர்கள்

இந்த பாடத்தில் பல சட்டவிளக்கங்கள் உள்ளன.

**முதலாவது சட்டவிளக்கம்**

## ‘ஸகாத்’திற்கு உரியவர்கள் யார்? அதற்குரிய ஆதாரம் என்ன?

أهل الزكاة ‘ஸகாத்’திற்கு உரியவர்கள் அதாவது ‘ஸகாத்’ பெற தகுதியானவர்கள்.

இவர்கள் மொத்தம் எட்டு வகையினர் என அல்லாஹ் தனது வேதத்தில் வரையறுத்து கூறியிருக்கின்றான்.

إِنَّمَا الصَّدَقَاتُ لِلْفُقَرَاءِ وَالْمَسَاكِينِ وَالْعَامِلِينَ عَلَيْهَا وَالْمُؤَلَّفَةِ قُلُوبُهُمْ وَفِي الرِّقَابِ وَالْغَارِمِينَ وَفِي سَبِيلِ اللّٰهِ وَابْنِ السَّبِيلِ فَرِيضَةً مِنَ اللّٰهِ وَاللّٰهُ عَلِيمٌ حَكِيمٌ

(‘ஸகாத்’ என்ற கட்டாய) தர்மங்கள் எல்லாம் வறியவர்களுக்கும், ஏழைகளுக்கும், அதற்கு பணிசெய்பவர்களுக்கும், உள்ளங்கள் இணைக்கப்பட வேண்டியவர்களுக்கும், அடிமைகளை

உரிமையிடுவதற்கும், கடனாளிகளுக்கும், அல்லாஹ்வின் பாதையில் போரிடுபவர்களுக்கும், வழிபோக்கர்களுக்கும் உரியதாகும். இதுதான் அல்லாஹ்வின் புறத்தில் இருந்து மார்க்கமாக்கப்பட்ட சட்டமாகும். அல்லாஹ் நன்கறிந்தவன், மகா ஞானவான் ஆவான்.

(அல்குர்ஆன் 9 : 60)

இந்த எட்டு வகையினருடைய விளக்கம் பின்வருமாறு:

1). لِلْفُقَرَاءِ - வறியவர்களுக்கு.

இவர்கள் யாரென்றால் தனது தேவைகளையும் தனது பராமரிப்பில் உள்ளவர்களின் தேவைகளையும் பூர்த்தி செய்ய இயலாதவர்கள் ஆவார்கள். தேவைகள் என்றால் உணவு, உடை, உறைவிடம் ஆகும். யாரிடம் எவ்விதமான வருமானமும் இல்லையோ அல்லது தேவையைவிட குறைவாக இருக்கின்றதோ அவரை فقير ஃபக்கீர் -வறியவர் என்று கூறப்படுகின்றது. அவருடைய ஓர் ஆண்டு உடைய தேவையை அவர் நிறைவேற்றிக் கொள்கின்ற அளவு அவருக்கு ‘ஸகாத்’ கொடுக்கப்படும்.

2). وَالْمَسَاكِينِ - ஏழைகளுக்கும்.

இவர்கள் யாரென்றால் தனது தேவையில் பாதியளவு அல்லது அதைவிட கொஞ்சம் அதிகமானதை நிறைவேற்றுகின்ற அளவிற்கு வருமானம் உள்ளவர்கள் ஆவார்கள். உதாரணமாக, ஒருவருக்கு இரு நூறு ரூபாய் தேவை. ஆனால், அவரிடம் நூறு ரூபாய்தான் இருக்கின்றது. இப்படிப்பட்டவர்களுக்கு ஓர் ஆண்டிற்கு எவ்வளவு தேவையோ அந்தளவு அவர்களுக்கு ‘ஸகாத்’ கொடுக்கப்படும்.

3). وَالْعَامِلِينَ عَلَيْهَا - அதற்கு பணிசெய்பவர்களுக்கும்.

இவர்கள் யாரென்றால், ‘ஸகாத்’தை வசூல் செய்வதற்காக இஸ்லாமிய அரசாங்கத்தின் மூலம் அனுப்பப்படுகின்ற பணியாளர்கள் ஆவார்கள். இவர்கள் ‘ஸகாத்’தை வசூலிப்பதற்காக சென்று வரக்கூடிய கால அளவில் இவர்களுக்கு எவ்வளவு தேவையோ அந்த அளவு ‘ஸகாத்’தில் இருந்து

இவர்களுக்கு கொடுக்கப்படும். இவர்கள் செல்வந்தர்களாக இருந்தாலும் 'ஸகாத்' உடைய தொகையை பெற இவர்கள் தகுதியுள்ளவர்கள்தான். ஏனெனில், இந்த பணியாளர்கள் தங்களை இந்த வேலைக்காக ஒதிக்கிக் கொண்டார்கள். அவ்வாறே, 'ஸகாத்' உடைய பொருள்களை நிர்வகிப்பதற்கு, கணக்கு வழக்கு எழுதுவதற்கு, பாதுகாப்பதற்கு, பிரித்து கொடுப்பதற்கு பணியமர்த்தப்பட்டவர்கள் எல்லோரும் இந்த வகையில் அடங்குவார்கள்.

4). وَالْمُؤَلَّفَةِ قُلُوبُهُمْ- உள்ளங்கள் இணைக்கப்பட வேண்டியவர்களுக்கும்.

இவர்கள் பல வகைப்படுவார்கள்.

அ) நிராகரிப்பாளர்களில் யாருடைய உள்ளங்களை இஸ்லாமின் பக்கம் ஈர்க்க வேண்டும் என்று விரும்பப்படுகின்றதோ அவர்களுக்கு 'ஸகாத்'தை கொடுத்து அவர்களை இஸ்லாமின் பக்கம் ஈர்க்கப்படும்.

ஆ). இஸ்லாமை ஏற்றவர்கள் மார்க்கத்தை பின்பற்றி நடப்பதில் பலவீனமானவர்களாக இருந்தால் அவர்களுக்கும் 'ஸகாத்'தை கொடுத்து அவர்களை இஸ்லாமிய மார்க்கத்தில் பலப்படுத்த முயற்சிக்கப்படும்.

இ). இஸ்லாமை ஏற்றவர்களின் உறவினர்களையும் இஸ்லாமின் பக்கம் ஆர்வமூட்டுவதற்காக அவர்களுக்கும் 'ஸகாத்' கொடுக்கலாம். அதன் மூலம் அவர்கள் இஸ்லாமை ஏற்க ஆர்வமூட்டப்படும்.

ஈ). நிராகரிப்பாளர்களில் யாருடைய உதவி தேவைப்படுகின்றதோ அவர்களுக்கும் 'ஸகாத்' கொடுக்கலாம். அதன் மூலம் அவர்கள் முஸ்லிம்களின் உதவியாளர்களாக மாறலாம்.

உ) நிராகரிப்பாளர்களில் யார் முஸ்லிம்களுக்கு தீங்கு செய்கிறார்களோ அவர்களுக்கு செல்வம் கொடுக்கப்பட்டால் அந்த தீங்குகளை நிறுத்திக் கொள்வார்கள் என்று ஆதரவு இருக்குமோ அவர்களுக்கும் 'ஸகாத்' கொடுக்கலாம்.

5). وَفِي الرِّقَابِ அடிமைகளை உரிமையிடுவதற்கும்.

அதாவது, முஸ்லிமான ஆண், அல்லது முஸ்லிமான பெண்

அடிமையை உரிமை விடுவதற்காக ‘ஸகாத்’ உடைய செல்வத்தை பயன்படுத்தலாம். அதாவது, ‘ஸகாத்’ உடைய செல்வத்தைக் கொண்டு அடிமைகளை வாங்கி உரிமை விடுவது. அந்த அடிமை முழுமையான அடிமையாக இருந்தாலும் சரி. அல்லது உரிமையிடப்படுவதற்கு ஒப்பந்தம் செய்துகொண்ட مكاتب - முகாதப் அடிமையாக இருந்தாலும் சரி. இவ்வாறு அடிமைகளை உரிமை விடும்போது அவர்கள் சுதந்திரமானவர்களாக ஆகி அல்லாஹ்வை முழுமையாக வணங்குவதற்கு வசதி பெறுகிறார்கள். சமுதாயத்தில் ஆக்கப்பூர்வமான அங்கத்தினராக அவர்கள் மாறிவிடுகிறார்கள்.

அவ்வாறே, எதிரிகளிடம் சிறைப்பட்டுள்ள முஸ்லிம் சிறைவாசிகளை விடுதலை செய்வதற்காகவும் ‘ஸகாத்’துடைய செல்வத்தை கொடுக்கலாம்.

6). وَالْغَارِمِينَ - கடனாளிகளுக்கும்.

அதாவது பாவமல்லாத அவசியமான தேவைகளுக்காக கடன் பட்டவர்கள் ‘ஸகாத்’ பெற தகுதியானவர்கள் ஆவார்கள். அவர்களின் கடனை நிறைவேற்றிக் கொள்கின்ற அளவிற்கு அவர்களுக்கு ‘ஸகாத்’ கொடுக்கலாம். அவர்கள் அந்த கடன் தொகையை தங்களுக்காக வாங்கி இருந்தாலும் சரி. அல்லது பிறரின் தேவையை நிறைவேற்ற வாங்கி இருந்தாலும் சரி. மேலும், சண்டை செய்து கொண்ட இருவருக்கு இடையில் இணக்கத்தை ஏற்படுத்த முயற்சிக்கும்போது அவர்களில் ஒருவர் மற்றவருக்கு கொடுக்க வேண்டிய தொகையை தான் தருவதாக பொறுப்பேற்றவருக்கும் ‘ஸகாத்’தை கொடுக்கலாம். அவர் செல்வந்தராக இருந்தாலும் சரி.

7). وَفِي سَبِيلِ اللهِ - அல்லாஹ்வின் பாதையில் போரிடுபவர்களுக்கும்.

அதாவது, எவ்வித ஊதியமும் இல்லாமல் அல்லாஹ்வின் பாதையில் ஜிஹாத் செய்வதற்காக தன்னை ஈடுபடுத்திக்கொண்டவர்கள் ‘ஸகாத்’ பெற தகுதியானவர்கள் ஆவார்கள். அந்த முஜாஹிதுகள்[52] செல்வந்தர்களாக இருந்தாலும் சரி அல்லது ஏழைகளாக இருந்தாலும் சரி.

52. அல்லாஹ்வின் பாதையில் போர் செய்யக்கூடியவர்கள்.

8). وَابْنِ السَّبِيلِ – வழிபோக்கர்களுக்கும்.

அதாவது, பயணத்தின் போது தமது செல்வத்தை இழந்தவர்கள் அல்லது செல்வம் தீர்ந்துபோனவர்கள். இவர்களுக்கு கடன் தருவதற்கு யாரும் முன்வரவில்லை என்றால் அவர்களுக்கு தேவையான அளவிற்கு 'ஸகாத்' உடைய தொகையில் இருந்து கொடுக்கலாம்

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## 'ஸகாத்' யாருக்கு கொடுக்கக் கூடாது?

யாருக்கு 'ஸகாத்' கொடுப்பது கூடாதோ அவர்களின் விவரம் பின்வருமாறு:

1). செல்வந்தர்கள், வசதியுள்ளவர்கள், உழைத்து சம்பாதிப்பதற்கு உடல் வலிமை உள்ளவர்கள்.

**عَنْ عُبَيْدِ اللهِ بْنِ عَدِيِّ بْنِ الْخِيَارِ ﵁ قَالَ أَخْبَرَنِي رَجُلَانِ أَنَّهُمَا أَتَيَا النَّبِيَّ ﷺ فِي حَجَّةِ الْوَدَاعِ وَهُوَ يُقَسِّمُ الصَّدَقَةَ فَسَأَلَاهُ مِنْهَا فَرَفَعَ فِينَا الْبَصَرَ وَخَفَضَهُ فَرَآنَا جَلْدَيْنِ فَقَالَ إِنْ شِئْتُمَا أَعْطَيْتُكُمَا وَلَا حَظَّ فِيهَا لِغَنِيٍّ وَلَا لِقَوِيٍّ مُكْتَسِبٍ رَوَاهُ أَبُوْ دَاوُدُ بِرَقْمِ ١٣٩١**

இருவர் தமக்கு கூறியதாக உபைதுல்லாஹ் இப்னு அதிய் இப்னு அல்கியார்[53] ﵁ அறிவிக்கிறார்கள்: அந்த இருவரும் நபி ﷺ அவர்களிடம் ''ஹஜ்ஜதுல் விதா''வில் வந்தார்கள். அப்போது நபி ﷺ அவர்கள் 'ஸகாத்'தை (மக்களுக்கு) பிரித்து கொடுத்துக் கொண்டிருந்தார்கள். அந்த இருவரும் 'ஸகாத்'திலிருந்து தங்களுக்கும் வேண்டும் என்று நபி ﷺ அவர்களிடம் கேட்டார்கள். (அந்த இருவரும் பிறகு நடந்ததை கூறினார்கள்:) நபி ﷺ அவர்கள் எங்களை ஏற இறங்கப் பார்த்தார்கள்.

53. இவர் ஸஹாபியா என்பதில் கருத்து வேற்றுமை உள்ளது. அறிஞர் இப்னு ஸஅது மட்டும் இவரை நபித்தோழர் என்று குறிப்பிடுகிறார். இவர் நபியவர்களுடைய காலத்தில் பிறந்தார். இவர் குறைஷிகளில் மிகப்பெரிய மார்க்க அறிஞராக திகழ்ந்தார் என்று இமாம் தஹபி ﵀ குறிப்பிடுகிறார்கள். (சியரு அஃலாமின் நுபலா)

எங்களை வலிமையானவர்களாக கண்டார்கள். ஆகவே, நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: "நீங்கள் விரும்பினால் நான் உங்களுக்குத் தருகின்றேன். ஆனால், இந்த 'ஸகாத்'துடைய பொருள்களில் செல்வந்தருக்கும் சம்பாதிப்பதற்கு ஆற்றல் உள்ளவருக்கும் எவ்வித பங்கும் இல்லை."[54]

எனினும், 'ஸகாத்' வசூலிப்பவர், அல்லது 'ஸகாத்' பிரிவில் பணி செய்பவர், கடனாளிகள் இவர்கள் செல்வந்தர்களாக இருந்தாலும் இவர்களுக்கு 'ஸகாத்' கொடுக்கலாம்.

அவ்வாறே, உடல் வலிமையும் பொருள் சம்பாதிப்பதற்கு சக்தியும் உள்ள ஒருவர் தன்னை மார்க்கக் கல்வி கற்பதற்காக ஒதுக்கிக் கொண்டால் அவருக்கும் 'ஸகாத்' கொடுக்கலாம். ஆனால், அவரிடம் வேறு செல்வம் இருந்தால் அவருக்கு 'ஸகாத்' கொடுப்பதை தவிர்த்துக்கொள்ள வேண்டும். கல்வி கற்பதும் அல்லாஹ்வின் பாதையில் ஜிஹாது செய்வதாகும்.

ஒருவர் வணக்க வழிபாட்டுக்காக தன்னை ஒதிக்கிக்கொண்டார். அவர் உடல் வலிமை உள்ளவராகவும் சம்பாதிப்பதற்கு சக்தி உள்ளவராகவும் இருக்கின்றார். இத்தகையவர்களுக்கு 'ஸகாத்' கொடுக்கக் கூடாது. ஏனெனில், இபாதத்துடைய நன்மை இபாதத் செய்பவருக்கு மட்டும் கிடைக்கும். கல்வி கற்பது அவ்வாறு அல்ல. ஜிஹாதைப் போன்று அதன் நன்மையும் மார்க்கத்திற்கும் சமுதாயத்திற்கும் பொதுவானதாகும்.

2). أصول - உஸூல் தந்தை மற்றும் தந்தை வழியில் உள்ளவர்கள். உதாரணமாக, பாட்டன், முப்பாட்டன், பாட்டி, முப்பாட்டி. இன்னும் فروع பிள்ளைகள் மற்றும் பிள்ளைகளின் வழியில் உள்ளவர்கள். உதாரணமாக, பேரன், பேத்திகள், கொள்ளுப்பேரன், கொள்ளுப்பேத்தி. மனைவி, இன்னும் யாருக்கெல்லாம் இவர் செலவழிப்பது இவர் மீது கடமையாக இருக்கின்றதோ அவர்களுக்கு தனது 'ஸகாத்'தை கொடுக்கக்கூடாது. மேற்கூறப்பட்டவர்களுக்கு இவர் செலவு செய்து, பராமரிக்க வேண்டும். 'ஸகாத்'தை இவர்களுக்கு கொடுப்பதால்

54. நூல்: அபூ தாவூத், எண்: 1391

பிறகு, இவர்களுக்கு செலவு செய்ய வேண்டிய அவசியம் இவர் மீது இருக்காது. ஆகவே, ‘ஸகாத்’துடைய பலன் அந்த நபருக்கே வந்து சேர்ந்ததாக ஆகிவிடும். அதாவது ‘ஸகாத்’தை இவர் தனக்கே கொடுத்துக்கொண்டதாக ஆகிவிடும்.

### 3). பொதுவான நிராகரிப்பாளர்கள்

அதாவது ‘ஸகாத்’ பெற தகுதியானவர்களில் நான்காவது வகையில் கூறப்படாத பொதுவான காஃபிர்கள் – நிராகரிப்பாளர்களுக்கு ‘ஸகாத்’ கொடுப்பது கூடாது.

நபி ﷺ அவர்கள் முஆத் ؓ அவர்களுக்கு ‘ஸகாத்’தைப் பற்றி கூறிய அறிவுரையில் வந்துள்ளதாவது:

فَأَعْلِمْهُمْ أَنَّ اللّٰهَ افْتَرَضَ عَلَيْهِمْ صَدَقَةً فِي أَمْوَالِهِمْ تُؤْخَذُ مِنْ أَغْنِيَائِهِمْ وَتُرَدُّ عَلَى فُقَرَائِهِمْ

“நிச்சயமாக அவர்கள் (–இஸ்லாமை ஏற்று தொழுகையை நிலை நிறுத்தக்கூடியவர்கள்) மீது அவர்களுடைய செல்வங்களில் ‘ஸகாத்’தை அல்லாஹ் கடமையாக்கி இருக்கின்றான். அந்த ‘ஸகாத்’ அவர்களில் உள்ள செல்வந்தர்களிடமிருந்து வாங்கப்பட்டு அவர்களில் உள்ள ஏழைகளுக்கு திரும்ப கொடுக்கப்படும்.”[55]

இங்கு “فقرائهم அவர்களில் உள்ள ஏழைகள்” என்ற பதம் முஸ்லிம்களை மட்டும் குறிக்கின்றது. ஆகவே, பொதுவான காஃபிர்களுக்கு ‘ஸகாத்’தை கொடுப்பது கூடாது. மேலும் ‘ஸகாத்’துடைய தத்துவங்களில் ஒன்று முஸ்லிம் சமுதாயத்தில் உள்ள ஏழைகள் மற்றும் பணக்காரர்களுக்கு மத்தியில் பரஸ்பர அன்பை ஏற்படுத்தி, சமுதாய பிணைப்பை ஏற்படுத்துவதாகும். இந்த வகையான தொடர்பை நாம் நிராகரிப்பாளர்களுடன் ஏற்படுத்த முடியாது.

### 4). நபி ﷺ அவர்களின் குடும்பத்தார்கள்.

55. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ؓ, நூல்: புகாரி, எண்: 1308

நபி ﷺ அவர்களின் குடும்பத்தார்கள், கிளையார்களுக்கு ‘ஸகாத்’ கொடுப்பது கூடாது. இது அவர்களின் கண்ணியத்தை முன்னிட்டும் அவர்களின் சிறப்பை முன்னிட்டும் ஆகும்.

إِنَّ الصَّدَقَةَ لَا تَنْبَغِي لِآلِ مُحَمَّدٍ إِنَّمَا هِيَ أَوْسَاخُ النَّاسِ

நிச்சயமாக ‘ஸகாத்’ முஹம்மதின் கிளையார்களுக்கு ஆகுமாகாது. அதுவெல்லாம் மக்களின் அழுக்குகளாகும் என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.[56]

**நபி ﷺ அவர்களின் குடும்பத்தார்கள் யார்?**

அவர்கள் ஹாஷிம் வழித்தோன்றல்கள் மற்றும் முத்தலிப் வழித்தோன்றல்கள் ஆவார்கள்.

சிலர் ஹாஷிம் வழித்தோன்றல்கள் மட்டும்தான் இந்த சட்டத்தின் கீழ் வருவார்கள் என்று கூறுகிறார்கள். இதுதான் சரியான கூற்றுமாகும். ஆகவே, முத்தலிப் உடைய வழித்தோன்றல்களுக்கு ‘ஸகாத்’ கொடுப்பது கூடும். ஆனால், அவர்கள் குர்ஆனில் கூறப்பட்ட ‘ஸகாத்’ வாங்க தகுதியான எட்டு பிரிவுகளில் ஏதாவது ஒரு பிரிவின் கீழ் வரவேண்டும்.

**5). நபி ﷺ அவர்களின் குடும்பத்தார்களால் உரிமையிடப்பட்ட அடிமைகளுக்கும் ‘ஸகாத்’ கொடுப்பது கூடாது.**

عَنْ أَبِي رَافِعٍ رضي الله عنه أَنَّ النَّبِيَّ ﷺ بَعَثَ رَجُلًا مِنْ بَنِي مَخْزُومٍ عَلَى الصَّدَقَةِ فَقَالَ لِأَبِي رَافِعٍ اصْحَبْنِي كَيْمَا تُصِيبَ مِنْهَا فَقَالَ لَا حَتَّى آتِيَ رَسُولَ اللهِ ﷺ فَأَسْأَلَهُ فَانْطَلَقَ إِلَى النَّبِيِّ ﷺ فَسَأَلَهُ فَقَالَ إِنَّ الصَّدَقَةَ لَا تَحِلُّ لَنَا وَإِنَّ مَوَالِيَ الْقَوْمِ مِنْ أَنْفُسِهِمْ رَوَاهُ الترمذي بِرَقْمِ ٥٩٣

அபூ ராஃபி رضي الله عنه உடைய மகனார் உபைதுல்லாஹ் رضي الله عنه கூறுகிறார்:

56. அறிவிப்பாளர்: அப்துல் முத்தலிப் இப்னு ரபீஆ இப்னு அல்ஹாரிஸ் رضي الله عنه, நூல்: முஸ்லிம், எண்: 1784

மக்ஸூம் குடும்பத்தை சேர்ந்த ஒருவரை 'ஸகாத்'தை வசூல் செய்ய நபி ﷺ அவர்கள் அனுப்பினார்கள். அவர் அபூ ராஃபி ؓ இடம் நீயும் என்னுடன் வா, உனக்கும் இதிலிருந்து கிடைக்கும் என்று கூறினார். அதற்கு, ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் சென்று இதுபற்றி நான் விசாரிக்காத வரை (உம்முடன்) நான் வர மாட்டேன் என்று அபூ ராஃபி ؓ கூறிவிட்டார். அவர் நபி ﷺ அவர்களிடம் சென்று இது பற்றி நபியவர்களிடம் கேட்டார். அதற்கு நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: "நிச்சயமாக 'ஸகாத்' எங்களுக்கு தகுதியானதல்ல. ஒரு கூட்டத்தின் உரிமையிடப்பட்ட அடிமைகள் அவர்களை (-அந்தக் கூட்டத்தைச்) சேர்ந்தவர்களே![57]

### 6). அடிமைகளுக்கு 'ஸகாத்' கொடுக்கக் கூடாது.

ஏனெனில், அடிமையின் செல்வம் அவரது எஜமானருக்கு சொந்தமானதாகும். அடிமைக்கு 'ஸகாத்' கொடுக்கப்பட்டால் அது எஜமானருக்கு சென்றுவிடும். அடிமைக்கு தேவையான செலவுகளை எல்லாம் அவருடைய எஜமானர்தான் செய்ய வேண்டும். ஆகவே, அவர் 'ஸகாத்' வாங்க வேண்டிய அவசியமில்லை.

ஆனால், அடிமை முகாதப்[58] ஆக இருந்தால் அவர் தனது எஜமானருக்கு கொடுக்க வேண்டிய தொகை அளவு அவருக்கு 'ஸகாத்' கொடுக்கலாம்

அவ்வாறே, 'ஸகாத்' வசூலிக்கின்ற பணியை அடிமை செய்தால் அப்போது அவருக்கு 'ஸகாத்' கொடுக்கலாம். அவர் ஒரு கூலிக்காரரைப் போன்று ஆவார். ஆகவே, அவர் 'ஸகாத்'தை வசூல் செய்கின்ற வேலைக்காக அவருக்கு 'ஸகாத்' கொடுக்கலாம். எஜமானர் அனுமதி கொடுத்தால் அடிமை வெளியில் சென்று வேலை செய்யலாம்.

யாராவது தனது 'ஸகாத்'தை மேற்கூறப்பட்ட பிரிவுகளில் உள்ள ஒருவருக்கு "இவர்களுக்கு கொடுப்பது கூடாது" என்பது தெரிந்தே கொடுத்தால் அவர் பாவி - குற்றவாளி ஆவார்

57. நூல்: திர்மிதி, எண்: 593

58. தன்னுடைய எஜமானரிடம் குறிப்பிட்ட ஒரு தொகையை கொடுத்து சுதந்திரமாவதற்காக ஒப்பந்தம் செய்து கொண்ட அடிமைக்கு முகாதப் என்று சொல்லப்படும்.

**மூன்றாவது சட்டவிளக்கம்**

## ‘ஸகாத்’தை எட்டு பேருக்கும் கொடுக்க வேண்டுமா?

‘ஸகாத்’தை பிரித்துக் கொடுக்கும்போதும் ‘ஸகாத்’ வாங்க தகுதி உள்ள எட்டு பிரிவினர்களுக்கும் கொடுக்க வேண்டுமா? அல்லது அவர்களில் சிலருக்கு கொடுத்தாலும் ‘ஸகாத்’ நிறைவேறிவிடுமா?

ஒருவர் தனது ‘ஸகாத்’தை கொடுக்க நாடும்போது எட்டு வகையினர்களில் யாருக்கு வேண்டுமானாலும் ‘ஸகாத்’தை முழுமையாகக் கொடுக்கலாம். ஒரு வகையினருக்கு அல்லது இரு வகையினருக்கு அல்லது அதற்கு அதிகமான வகையினர்களுக்குக் கொடுக்கலாம். எட்டு பிரிவினர்களில் எல்லோருக்கும் கண்டிப்பாக பிரித்துக் கொடுக்க வேண்டும் என்ற கட்டாயமில்லை. இதுதான் சரியான கூற்றாகும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

إِنْ تُبْدُوا الصَّدَقَاتِ فَنِعِمَّا هِيَ وَإِنْ تُخْفُوهَا
وَتُؤْتُوهَا الْفُقَرَاءَ فَهُوَ خَيْرٌ لَكُمْ

நீங்கள் தர்மங்களை வெளிப்படுத்தி கொடுத்தால் அது சிறந்ததுதான். நீங்கள் அவற்றை மறைத்து, அவற்றை ஏழைகளுக்கு கொடுத்தால் அது உங்களுக்கு மிக சிறந்ததாகும். (அல்குர்ஆன் 2 : 271)

கருத்து: இவ்விடத்தில் கூறப்பட்டுள்ள صدقات ஸதகாத் தர்மங்கள் என்பது பொதுவானதாகும். கடமையான ஸகாத்தையும் உபரியான தர்மங்களையும் எடுத்துக் கொள்ளும். குறிப்பாக, இதுபோன்ற வசனங்களில் தர்மங்கள் என்று சொல்லப்படும்போது அது இஸ்லாமிய மார்க்கத்தில் கடமையான ஸகாத்தைத்தான் முதலாவதாக எடுத்துக் கொள்ளும். ஆகவேதான் ஸகாத்தை யாருக்குக் கொடுக்கவேண்டும் என்று கூறக்கூடிய வசனத்தில் ஸகாத் என்ற பதத்திற்குப் பதிலாக ஸதகாத் என்ற பதம் பயன்படுத்தப்பட்டிருக்கிறது.

நபி ﷺ அவர்கள் முஆத் ﵁ அவர்களுக்கு ‘ஸகாத்’தைப் பற்றி கூறிய அறிவுரையில் வந்துள்ளதாவது:

فَأَعْلِمْهُمْ أَنَّ اللهَ افْتَرَضَ عَلَيْهِمْ صَدَقَةً فِي أَمْوَالِهِمْ تُؤْخَذُ مِنْ أَغْنِيَائِهِمْ وَتُرَدُّ عَلَى فُقَرَائِهِمْ

“நிச்சயமாக அவர்கள் (–இஸ்லாமை ஏற்று தொழுகையை நிலை நிறுத்தக்கூடியவர்கள்) மீது அவர்களுடைய செல்வங்களில் ‘ஸகாத்’தை அல்லாஹ் கடமையாக்கி இருக்கின்றான். அந்த ‘ஸகாத்’ அவர்களில் உள்ள செல்வந்தர்களிடமிருந்து வாங்கப்பட்டு அவர்களில் உள்ள ஏழைகளுக்கு திரும்ப கொடுக்கப்படும்.”[59]

**கருத்து:** இந்த நபிமொழியில் நபி ﷺ அவர்கள் ஏழைகளை மட்டும் குறிப்பிட்டுள்ளார்கள். எட்டு வகையினருக்கும் ‘ஸகாத்’தை கொடுக்க வேண்டும் என்று இருந்திருந்தால் நபி ﷺ அவர்கள் ஏழைகளை மட்டும் இங்கு கூறி இருக்க மாட்டார்கள்.

عَنْ قَبِيصَةَ بْنِ مُخَارِقٍ الْهِلَالِيِّ ﵁ قَالَ تَحَمَّلْتُ حَمَالَةً فَأَتَيْتُ رَسُولَ اللهِ ﷺ أَسْأَلُهُ فِيهَا فَقَالَ أَقِمْ حَتَّى تَأْتِيَنَا الصَّدَقَةُ فَنَأْمُرَ لَكَ بِهَا قَالَ ثُمَّ قَالَ يَا قَبِيصَةُ إِنَّ الْمَسْأَلَةَ لَا تَحِلُّ إِلَّا لِأَحَدِ ثَلَاثَةٍ رَجُلٍ تَحَمَّلَ حَمَالَةً فَحَلَّتْ لَهُ الْمَسْأَلَةُ حَتَّى يُصِيبَهَا ثُمَّ يُمْسِكُ وَرَجُلٌ أَصَابَتْهُ جَائِحَةٌ اجْتَاحَتْ مَالَهُ فَحَلَّتْ لَهُ الْمَسْأَلَةُ حَتَّى يُصِيبَ قِوَامًا مِنْ عَيْشٍ أَوْ قَالَ سِدَادًا مِنْ عَيْشٍ وَرَجُلٌ أَصَابَتْهُ فَاقَةٌ حَتَّى يَقُومَ ثَلَاثَةٌ مِنْ ذَوِي الْحِجَا مِنْ قَوْمِهِ لَقَدْ أَصَابَتْ فُلَانًا فَاقَةٌ فَحَلَّتْ لَهُ الْمَسْأَلَةُ حَتَّى يُصِيبَ قِوَامًا مِنْ عَيْشٍ أَوْ

59. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵄, நூல்: புகாரி, எண்: 1308

قَالَ سِدَادًا مِنْ عَيْشٍ فَمَا سِوَاهُنَّ مِنَ الْمَسْأَلَةِ يَا قَبِيصَةُ سُحْتًا يَأْكُلُهَا صَاحِبُهَا سُحْتًا رَوَاهُ مُسْلِمٌ بِرَقْمِ ١٧٣٠

கபீஸா இப்னு முகாரிக் அல்ஹிலாலி ﵁ கூறுகின்றார்: நான் ஒரு பொறுப்பை ஏற்றுக் கொண்டேன். (இருவருக்கும் இடையில் பிரச்சனையை தீர்த்து இணக்கத்தை ஏற்படுத்துவதற்காக அவர்களில் ஒருவர் மற்றவருக்கு கொடுக்க வேண்டிய தொகையை நான் தருவதாக பொறுப்பேற்றுக் கொண்டேன்.) இதுபற்றி உதவி கேட்பதற்காக நான் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் வந்தேன். நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: நீ (எங்களுடன்) தங்குவாயாக! எங்களிடம் ‘ஸகாத்’ வரும். நாங்கள் உமக்கு அதை கொடுக்கும்படி (நமது பணியாளர்களுக்கு) உத்தரவு கொடுப்போம். பிறகு, கூறினார்கள்: “கபீஸாவே! பிறரிடம் யாசிப்பது மூன்று நபர்களில் ஒருவருக்கே தவிர ஆகுமாகாது. ஒருவர் யாரென்றால் அவர் ஒரு பொறுப்பை தன் மீது சுமந்து கொண்டார். ஆகவே, யாசிப்பது அவருக்கு ஆகுமாகும். அவர் தான் பொறுப்பேற்ற அளவிற்கு செல்வத்தை அடைந்து விட்டால் பிறகு யாசிப்பதை அவர் நிறுத்திக்கொள்ள வேண்டும். இன்னொருவர் யாரென்றால், ஒரு பேரழிவு ஏற்பட்டு அவருடைய செல்வத்தை எல்லாம் அது அழித்துவிட்டது. வாழ்க்கையை கழிப்பதற்கு வாழ்வாதாரம் ஒன்றை அவர் பெறுகின்றவரை அவர் யாசிப்பது அவருக்கு கூடும். இன்னொருவர் கடுமையான வறுமை அவருக்கு ஏற்பட்டது. புத்திமான்கள் மூன்று பேர் முன்னுக்கு வந்து இன்னாருக்கு வறுமை ஏற்பட்டது என்று கூறவேண்டும். அப்போது, தனக்கு ஒரு வாழ்வாதாரத்தை அவர் அடைகின்ற வரை யாசிப்பது அவருக்கு ஆகுமாகும். கபீஸாவே! இந்த மூன்று வகையான யாசகங்களைத் தவிர மற்றவை எல்லாம் ஹராமான – தடுக்கப்பட்ட பாவமாகும். யார் அதன் மூலம் செல்வத்தைப் பெற்று அனுபவிப்பாரோ அவர் ஹராமைத்தான் அனுபவிக்கின்றார்.[60]

**கருத்து:** இந்த ஹதீஸில் ‘ஸகாத்’துடைய செல்வத்தை கொடுப்பதற்காக கபீஸா என்ற தோழரை நபி ﷺ அவர்கள் தம்முடன் தங்க வைத்தார்கள்.

60. நூல்: முஸ்லிம், எண்: 1730

அவரும் தங்கியிருந்து நபி ﷺ அவர்களிடம் ‘ஸகாத்’ உடைய செல்வத்தை பெற்று திரும்பிச் சென்றார் என்பதை ஹதீஸின் கருத்திலிருந்து நாம் அறிய முடிகிறது. ‘ஸகாத்’தை எட்டு வகையினருக்கும் பிரித்து கொடுப்பதற்காக நபி ﷺ அவர்கள் காத்திருக்கவில்லை. அதை பெறுவதற்கு தகுதியான ஒருவர் தனக்கு முன் இருந்தபோது அவருக்கு அந்த ‘ஸகாத்’தை நபி ﷺ அவர்கள் கொடுத்து அனுப்பினார்கள்.

ஆகவே, அல்குர்ஆனில்,

إِنَّمَا الصَّدَقَاتُ لِلْفُقَرَاءِ

(‘ஸகாத்’ என்ற கட்டாய) தர்மங்கள் எல்லாம் வறியவர்களுக்கும்....

(அல்குர்ஆன் 9 : 60)

என்று அல்லாஹ் கூறியிருப்பதன் பொருள் ‘ஸகாத்’ பெற தகுதியானவர்களை விவரிப்பதுதான். ‘ஸகாத்’தை பிரித்துக் கொடுக்கும் போது இவர்கள் எல்லோருக்கும் கொடுக்க வேண்டும் என்று பொருள் அல்ல.

**நான்காவது சட்டவிளக்கம்**

## ‘ஸகாத்’தை ஓர் ஊரிலிருந்து வேறு ஊருக்கு கொண்டு செல்வது

ஓர் ஊரில் உள்ளவர்கள் கொடுத்த ‘ஸகாத்’தை அந்த ஊருக்கு அருகில் அல்லது தொலைவில் உள்ள வேறு ஓர் ஊருக்கு தேவையை முன்னிட்டு கொண்டு செல்வது கூடும். உதாரணமாக, வேறு ஊரில் இருப்பவர்கள் வறுமையில் அதிகம் சிரமப்படுகின்றார்கள். அல்லது ‘ஸகாத்’ கொடுப்பவரின் உறவினர்கள் வேறு ஓர் ஊரில் இருக்கின்றார்கள். அவர்கள் வறியவர்களாக இருப்பதால் அவர்களுக்கு ‘ஸகாத்’ தேவைப்படுகின்றது. இது போன்ற சூழ்நிலைகளில் வேறு ஊர்களுக்கு ‘ஸகாத்’தை அனுப்பிவைக்கலாம்.

உறவினர்களில் ‘ஸகாத்’ பெற தகுதியானவர் யாரும் இருந்தால்

அவர்களுக்கு ‘ஸகாத்’தை கொடுப்பதில் இரண்டு நன்மைகள் உள்ளன. ஒன்று, தர்மம் செய்த நன்மை. மற்றொன்று, உறவுகளை சேர்த்த நன்மை.

வேறு ஊர்களுக்கு ‘ஸகாத்’தை அனுப்பி வைக்கலாம் என்பதுதான் சரியான கூற்றாகும். ஏனெனில், அல்லாஹ் கூறும்போது,

إِنَّمَا الصَّدَقَاتُ لِلْفُقَرَاءِ

(‘ஸகாத்’ என்ற கட்டாய) தர்மங்கள் எல்லாம் வறியவர்களுக்கும்....

(அல்குர்ஆன் 9 : 60)

என்றுதான் கூறியிருக்கின்றான். ஆகவே, அந்த ஏழைகள் அல்லது மற்ற வகையினர்கள் எந்த இடத்தில், எந்த ஊரில் இருந்தாலும் சரி. அவர்கள் எல்லோரும் இதில் அடங்குவார்கள்.

------------